

# திருநெல்லை


ஆன்மீகத் திங்களிதழ்

குரோதி - ஆடி - 2024 - ஆகஸ்ட் | இணைய வழி - மலர் - 1 - இதழ் - 12


**உண்ணாமுலை அம்பாள் உடனுறை அண்ணாமலையார்**

**திருவண்ணாமலை**

# திருநெல்லை

இணைய வழி ஆன்மீகத் திங்களிதழ்

குரோதி – ஆடி

2024–ஆகஸ்ட்

இணையவழி மலர் 1 – இதழ் 12

(தனிச் சுற்றுக்கு மட்டும்)

சிறப்பாசிரியர்

பொற்கிழிக் கவிஞர்

சொ.சொ.மீ. சுந்தரம்

ஆலோசகர்

தமிழாகரர் தெ. முருகசாமி

ஆசிரியர் குழு

வெளியிடுபவர்

சீர் வளர் சீர்

நாராயண ஞான தேசிக சுவாமிகள்

கோவிலூர் மடாலயம்

கோவிலூர் 630 307

மானகிரி (அஞ்சல்)

(வழி) காரைக்குடி

சிவகங்கை மாவட்டம்

 04565–236846

 94433 37011

இணைய அச்சாக்கம்

திரு. கணேஷ்

ஸ்ரீபெரும்புதூர்


## பொருளடக்கம்

# ஆசியுரை



சீர் வளர் சீர்

**நாராயண ஞான தேசிக சுவாமிகள்**

கோவிலூர் ஆதினகர்த்தர்

அன்பர்கள் அனைவருக்கும் வணக்கம். சற்குருநாதன் திருவருளால் அனைவருக்கும் எல்லா நலன்களும் பெருகட்டும். நமது கோவிலூர் மடாலயத்தின் அறப்பணிகள், ஆன்மீகப் பணிகள், திருமுறைப் பணிகள் நாள்தோறும் வளர்ந்து வருகின்றன. நமது நாதஸ்வர, தவில் கல்லூரியில் பயிலும் மாணவர்கள் காரைக்குடி நகரச் சிவன் கோவிலில் நடைபெற்ற ஆடிப்பூரவிழாவில் 29.07.2024 ஆம் நாளன்று மங்கல இசை நிகழ்ச்சியைச்




காரைக்குடி நகர சிவன் கோவிலில், நம் நாதஸ்வர, தவில் கல்லூரி மாணவர்கள் பங்கு கொண்ட காட்சி.




**காரைக்குடி நகர சிவன் கோவிலில் நம் திருமுறை கல்லூரி மாணவர்கள் கலந்து கொண்ட காட்சி.**

சிறப்புடன் செய்தார்கள். மேலும் நமது திருமுறைக் கல்லூரியில் தேவார வகுப்பு பயிலும் மாணவர்கள் நமது தேவார ஆசிரியர் திருத்தணி திரு சுவாமிநாதன் அவர்களின் வழிகாட்டலில் 31.07.2024 அன்று மேற்படி கோவிலில் தேவாரப் பண் பாடினர். இவ்விரு நிகழ்ச்சிகளிலும் மாணவர்கள், ஆசிரியர்கள் பங்களிப்பும், மக்களின் பங்கேற்பும் சிறப்பாக இருந்தன. இந்நிகழ்வுகள் போல இன்னும் பிற இடங்களிலும் நமது மாணவர்களின் நிகழ்ச்சிகள் நடத்த ஆர்வமாக உள்ளனர். மற்ற இடங்களிலும் கோவில்களிலும் இந்நிகழ்ச்சியை நடத்தி பெரும்பயன் பெற வேண்டுகிறோம்.

**காசி அன்னதானதானத்தில் கலந்து கொண்டு சேவை செய்ய வருக!**

முக்தியளிக்கும் காசியில் அருள்மிகு விசுவநாதசுவாமி திருக்கோயில் நிர்வாகத்துடன் இணைந்து நமது கோவிலூர் மடாலயம் செய்யவிருந்த அன்னதான அறப்பணியின் தொடக்க விழா பெருமழை போன்ற தவிர்க்க முடியாத காரணங்களால் சற்று தள்ளி வைக்கப்பெற்றுள்ளது. பெரும்பாலும் செப்டம்பர் இறுதி அல்லது அக்டோபர் முதல் வாரத்தில் இந்த அன்னதான



**மீனாட்சி அம்மன்**
**காரைக்குடி நகர சிவன் கோவில்**

தொடக்கவிழா சிறப்புடன் நடத்தப்பட உள்ளது, அதற்கான முன்னேற்பாடுகள் அனைத்தும் இறைவன் திருவருளால் சிறப்புடன் நடந்து வருகின்றன.

இந்த அன்னதான அறப்பணி துவங்கியவுடன் நமது அன்பர்கள் அனைவரும் இந்த அன்னதானப் பணியில் கலந்து கொள்ள அன்புடன் அழைக்கிறோம். அன்னதான கூடத்தில் குறுகிய காலத்திற்கு, அதாவது சுமார் 15 நாட்களுக்குத் தங்கி அந்த அன்னதானம் சிறப்புடன் நடைபெற சேவையாற்ற வரலாம். இந்தக் காசி அன்னதான சேவைக்குத்

தன்னார்வத் தொண்டர்களாக பணியாற்ற விரும்புபவர்கள், 9444125193 என்ற தொலைபேசி எண்ணில் திரு முத்துக்குமார் அவர்களைத் தொடர்பு கொள்ளலாம். அவ்வாறு காசியில் அன்னதான சேவை செய்ய வருபவர்களுக்கு உணவு, உறைவிடம் ஏற்பாடு செய்யப்படும். மேலும் அவர்களுக்கு காசி விஸ்வநாதர் தரிசனமும் கிடைக்க ஏற்பாடு செய்து தரப்படும். இதற்கான முன்னேற்பாடுகள் நடைபெற்று வருகின்றன.

மேலும் காசி அருள்மிகு விசுவநாதரின் அருட்பிரசாதமும் நம் அன்பர்களுக்குக் கிடைக்க வாய்ப்பு ஏற்பட்டுள்ளது. காசியில் அருள்மிகு விசுவதநாதருக்கு நடைபெறும் சப்தரிஷி பூஜையில் வேஷ்டி,மற்றும் சேலை விசுவநாதருக்குப் படைப்பது சிறப்பு. அவ்வாறு வேஷ்டி, சேலைகளைப் படைத்துக் கொடுக்க சப்தரிஷி பூஜையைப் பொறுப்பேற்று நடத்தும் தலைமை குருக்கள் திரு குட்டு மகராஜ் நமக்கு சம்மதம் தெரிவித்துள்ளார். இவ்வாறு காசி விசுவநாதர் சன்னதியில் படைக்கப்பெற்ற சேலை வேஷ்டிகளை அணிவது மிகவும் நன்மை பயக்கும். அன்பர்கள் இந்த உபயத்தில் கலந்து கொள்ள விரும்பினால், கோவிலூர் மடத்தில் ரூபாய் 1,000 கட்டி பெற்றுக் கொள்ளலாம். விசுவநாதர் கோயிலில் படைக்கப்பெற்ற வேஷ்டி, சேலை ஆகியனவற்றைப் பெற தலா ரூ 1000 செலுத்தி இவ்வருள் பணியில் பங்கு கொள்ளலாம். கோவிலூர் மடத்தில் எப்போதும் அருள்மிகு காசி விசுவநாதருக்குப் படைத்த வேஷ்டி இருக்கும். சேலை வேண்டுபவர்கள் முன்பே சொல்லி வைக்கவேண்டும். மடத்தில் பெரும்பாலும் சேலை இருப்பில் இருக்காது என்பதால், சேலை பெற விரும்புபவர்கள், சில வாரங்கள் காத்திருந்து பெற்றுக்கொள்ள வேண்டும்.

இவ்வாறு காசியில் உடை, உணவு தானம் செய்ய நம் அன்பர்களுக்கு வாய்ப்பு கிடைத்துள்ளது. இவ்வரிய வாய்ப்பினை அனைவரும் பயன்படுத்திக் கொள்ள வேண்டுகிறோம். வாழ்நாளில் பதினைந்து நாட்கள் காசியில் இருந்து அன்னதானம் செய்விக்கக் கிடைத்திருக்கும் வாய்ப்பு எக்காலத்திலும் கிடைக்காத அரிய வாய்ப்பு. இதனைத் தாங்கள் அனைவரும் பெற்று பரம்பொருளின் ஆசியைப் பெற அன்புடன் வேண்டுகிறேன்.

### நாச்சியப்ப சுவாமிகள் கலை மற்றும் அறிவியல் கல்லூரியில் கல்வி வளர்ச்சிப் பணிகள்

நமது உயர்கல்வி நிறுவனமாக விளங்கும் சீர் வளர் சீர் நாச்சியப்ப சுவாமிகள் கலை மற்றும் அறிவியல் கல்லூரியில் பல்வகை கல்வி வளர்ச்சிப்பணிகள் நடைபெற்று வருகின்றன. குறிப்பாகக் காட்சித் தொடர்பியல் துறை, கணினி அறிவியல் துறை ஆகியவற்றில் அத்துறையினர் பெருஞ்சிறப்புடன் செயல்பட்டு வருகின்றனர்.

### காட்சித் தொடர்பியல் துறை (விஷுவல் கம்யூனிகேசன்)

சென்ற இதழில் குறிப்பிட்டது போல்,சென்னை சர்வதேச திரைப்பட சங்கத்தின் ஒத்துழைப்புடன் கொரிய திரைப்படத் திருவிழா திரு பழ கருப்பையா அவர்களின் மிகவும் சிறப்பான துவக்க உரையுடன் தொடங்கி நடத்தப்பட்டது. சுமார் நூறு என்ற அளவிலான

மாணவ,மாணவியர் இதில் கலந்து கொண்டு பயனடைந்தனர். மேலும் சென்னை ஆவிச்சி கலைக்கல்லூரியில் நடைபெற்ற சிறப்பு முதன்மை வகுப்புகள் (மாஸ்டர் கிளாஸ்) நேரடி ஒளிபரப்ப செய்யப்பட்டு மாணவர்கள் அதனைக் கண்டுப் பயனடைந்தனர். இத்தகைய சிறப்புத் திறன் மிக்க நிகழ்வுகள் சென்னை போன்ற பெருநகரங்களில் மட்டுமே சாத்தியம். அது கோவிலூர் போன்ற கிராமப் பகுதியில் கல்வி பயிலும் மாணவர்களுக்கும் கிடைத்திருப்பது மிகவும் அரிய வாய்ப்பு. அதற்குப் பேருதவி செய்த திரு. ஏவிஎம் கே. சண்முகம் அவர்களுக்கு நன்றி சொல்வதில் மிக்க மகிழ்ச்சி அடைகிறோம்.

**கணினி அறிவியல் துறை**

கணினி அறிவியல் துறை வா யிலாகத் தயாரிக்கப்பட்ட புகைப்படம் மூலமாக வருகைப் பதிவு செய்யும் செயலி முழுமையாகப் பயன்பாட்டுக்கு வந்துள்ளது. காரைக்குடி கம்பன் கற்பகத்திலும் மாணவ மாணவியரின் வருகை பதிவு,மற்றும் பாதுகாப்பு நோக்கில் உள்ள பயன்பாடுகளுக்கும் இந்தச் செயலியை விரைவில் பயன் படுத்தத் துவங்குவார்கள்.

விவசாயத்திற்குப் பயன்படும் ‘‘ட்ரோன்’’ (Drone) எந்திரம் நம் கல்லூரியைச் சார்ந்த ஆசிரிய/மாணவக் குழு தயாரித்து உள்ளது. அது இப்போது சோதனைக் கட்டத்தில் உள்ளது. விரைவில் பயன்பாட்டுக்கு வரும் என நம்புகிறோம்.

இவ்வாறு நாள்தோறும் நவீன உலகிற்கு ஏற்ற வகையில் நமது கல்லூரியின் செயல்பாடுகள்




நடைபெற்று வருகின்றன. தொடர்ந்து இப்பணியில் மாணவர்களை ஆசிரியர்கள் ஊக்குவித்து வருவது நமக்கு பெருமகிழ்ச்சியைத் தருகின்றது. கோவிலூர் மடாலய இணைய நூலகம் 4500 நூல்களுக்கு மேலாக வலையேற்றி வருகிறது. இப்பணிகளில் கலந்து கொண்டுள்ள காரைக்குடி கம்பன் அறநிலை, இந்து மதாபிமான சங்கம் ஆகியவற்றின் ஆதரவிற்கும் நன்றி.

இவ்வாறு ஒவ்வொரு நாளும் ஆன்மீக, கல்வி, அறப்பணி, நவீன அறிவியல் வளர்ச்சியில் பங்காற்றிட எல்லாம் வல்ல சற்குருபரன் திருவருள் துணை நின்று வருகிறது. இவை அனைத்திற்கும் நம் அன்பர்களின் ஆதரவும் துணை நிற்பதால் அடுத்த அடுத்த பணிகளைச் செய்ய இயலுகின்றது.

அனைவருக்கும் இந்திய சுதந்திர தின விழா வாழ்த்துக்கள். நம் தாய்நாட்டிற்கும் சுதந்திர தின நாள் வணக்கங்கள்.

## கோவிலூரின் கதை - 8

# சீர் வளர் சீர் சோமசுந்தர ஞான தேசிக சுவாமிகளின் வரலாறு




சீர் வளர் சீர்
சோமசுந்தர ஞான தேசிக சுவாமிகள்
(8ம் பட்டம்)
(1946–1971)



- முனைவர் மு.பழனியப்பன்
தமிழ்த்துறைத் தலைவர்,
அரசு கலை மற்றும் அறிவியல் கல்லூரி,
திருவாடானை

கோவிலூர் வேதாந்த மடத்திற்கு நீண்ட நெடிய பாரம்பரியம் உண்டு. குருபரம்பரையின்வழியில் வேதாந்தப் பாடம் கற்று வந்த சீடர்கள் தொடர்ந்து குருபீடத்தை அலங்கரித்து வந்தனர். இவர்கள் குருபீடத்திற்கு வருவதற்குத் தயக்கம் காட்டினாலும் பரம்பொருளின் அருளாற்றல் அவர்களை குருபீடம் அலங்கரிக்க வாய்ப்பளித்து வந்தது. அவ்வகையில் குருபீடத்தை எட்டாம் பட்டமாக அலங்கரிக்க வந்தவர் சீர் வளர் சீர் சோமசுந்தர ஞான தேசிக

சுவாமிகள் ஆவார்.

## பள்ளத்தூர் பெற்ற பெருஞ்சிறப்பு

பள்ளத்தூரில் வாழ்ந்த இராமநாதன் செட்டியார், மெய்யம்மை ஆச்சி ஆகியோர்க்கு வேண்டித் தவம் இருந்து பெற்றத் திருமகனாக ஆயிரத்து எண்ணூற்றுத் தொன்னூறாம் ஆண்டு மார்ச் மாதம் பன்னிரண்டாம் நாள் புதன்கிழமை அன்று சோமசுந்தரர் அவதரித்தார். இவரின் இயற்பெயர் நாகப்பன் என்றும் பின்னால் அது சோமசுந்தரமாக மாறியது என்றும் கருத்து உண்டு.

சோமசுந்தரர் அக்காலக் கல்வியையும் ஆங்கில மொழிக் கல்வியையும் கற்று வந்தார். நற்கல்வி, நல்லொழுக்கம் போன்றவற்றிற்கு இருப்பிடமாக சோம சுந்தரர் விளங்கி உரிய வயதில் திரவியம் தேட கோலாலம்பூருக்குச் சென்று அளவிலாப் பொருள் கொண்டு வந்தார். இவருக்கும் கொத்தமங்கலம் இலக்குமிபுரத்தைச் சேர்ந்த சிவகாமி என்பவருக்கும் திருமணத்தைப் பெற்றோர்கள் நடத்தி வைத்தனர்.

இருப்பினும் காலத்தின் கோலம் சிவகாமி ஆச்சி விரைவில் இறைவனடி சேர்ந்திட தனிமரமாய் ஆனார் சோமசுந்தரர். அக்காலம் அவருக்கு உலகின் நிலையாமைப் பண்பினை அறியச் செய்தது. பள்ளத்தூரில் இருந்து தனது இருப்பிடத்தைச் சோமசுந்தரர் காரைக்குடிக்கு மாற்றிக் கொண்டார்.

காரைக்குடி, முத்துப்பட்டினத்தைச் சார்ந்த கொ.நா. என்னும் பரம்பரை சார்ந்த இலக்குமியாச்சி அவர்களை இரண்டாம் மனைவியாக ஏற்று மணம் புரிந்தார் சோமசுந்தரர். இக்காலத்தில் காரைக்குடியில் தமிழ்க்கடல் இராய. சொக்கலிங்கனார் ஆன்மீக, இலக்கியப் பணிகளைச் செய்து வந்தார். அவரிடத்தில் சோமசுந்தரர் பல இலக்கிய ஆன்மீகப் பாடங்களைக் கேட்டு மகிழ்ந்தார்.

## துறவு நோக்கம்

மெல்ல மெல்ல மெய்யுணர்வை நோக்கி சோமசுந்தரரின் வாழ்க்கை திரும்ப ஆரம்பித்தது. இவரின் வழிபடு தெய்வம் குன்றக்குடி ஆறுமுகப் பெருமான் ஆவார். இவர் அவ்வப்போது குன்றக்குடிக்குச் சென்று வருவதும் இறைநிலையில் இருப்பதும் பழக்கமும் வழக்கமும் ஆகியது. குன்றக்குடி சண்முகநாதன் சன்னதியில் அங்குப் பணிபுரிந்த சதாசிவக் குருக்கள் என்பவர் இவருக்குச் சிறந்த வழிகாட்டியாக அமைந்தார். இவரிடம் சோமசுந்தரர் பஞ்சாக்கர உபதேசம் பெற்றார். சோமசுந்தரர் பஞ்சாக்கர மந்திரத்தை நாளும் ஓதி தன் மனத்தை துறவு நிலைக்கு பயணிக்க வைத்தார். இல்லறம் துறந்து துறவறம் ஏற்க இவர் மனம் தயாராகியது. நெடுங்குடி தலத்திற்குச் சென்று, அங்கு இருந்த தட்சிணா மூரத்தியின் திருவடிக் கீழ் காவியாடையை வைத்து, அதனை ஏற்று அணிந்து கொண்டுத் துறவியனார். இல்லத்தாருக்கும், சுற்றத்தாருக்கும் இத்துறவு அறிந்து கொள்ள இயலா நிலையில் அமைந்தது. இதன்பின் பல தலங்களுக்குத் தலயாத்திரையைச் சோமசுந்தரர் மேற்கொண்டார்.

## கோவிலூர் ஈர்ப்பு

தலயாத்திரை செய்து முடித்தபின் கோவிலூர் மடத்தின் வேதாந்த விழுப்பொருள் சோமசுந்தரரை ஈர்த்தது. அப்போது ஆறாம் பட்டமான சீர் வளர் சீர் அண்ணாமலை ஞான தேசிகர் கோவிலூரில் இருந்தபடி வேதாந்தப் பணிகளைச் செய்துவந்தார். அவரிடத்தில் தன்னை ஒப்படைத்து,

தனக்கு நல்வழி காட்டி ஆட்கொண்டருள வேண்டும் என்று விண்ணப்பித்துக் கொண்டார். கோவிலூரின் ஆறாம் பட்ட ஞானகுருவும் இவருக்கு அருள்செய்து சிலகாலம் காரைக்குடி நகரில் பிச்சை புகுந்து வாழ்ந்து வருக என்று வழிகாட்டினார். காரைக்குடியில் பிச்சை ஏற்று வாழ்ந்து வந்த சோமசுந்தரர் ஒருநாள் தன் இல்லத்தின் முன்பே பிச்சை கேட்டு நின்றார். இதனைக் கண்டு துணுக்குற்றது சோமசுந்தரர் குடும்பம். விதிவசத்தால் பிச்சை தந்தும் பிச்சை ஏற்றும் நிகழ்ந்தது அந்நிகழ்ச்சி.

தன் இல்லத்திலேயே பிச்சை புகுந்து துறவின் தூய தன்மையை உலகுக்கு உணர்த்திய சோமசுந்தரரின் செயல் ஆறாம் பட்டத்திற்கு எட்டியது. சோமசுந்தரரைக் கோவிலூர் மடத்தில் தங்கிட அனுமதித்து மடத்துப் பணிகளையும் வேதாந்த அறிவையும் பெற ஆசிரியரின் திருவுள்ளம் ஆணை தந்தது. அவ்வாணையைத் தலைமேல் ஏற்று நிறைவாகச் செய்து வந்தார் சோமசுந்தரர்.

கால ஓட்டத்தில் ஆறாம் பட்டம் பரம்பொருள் இருக்கைசேர, இரண்டாம் குருவாக ஏழாம் பட்டம் சீர் வளர் சீர் மகாதேவ ஞான தேசிக சுவாமிகள் அமைந்து சோமசுந்தரருக்கு நல்வழி காட்டினார். மேலும் முதல்நிலையில் பாடம் கேட்டவர்கள் இரண்டாம் நிலையில் சோமசுந்தரரிடம் பாடம் கேட்கலாம் என்றும் அருளாணை பிறந்தது. சோமசுந்தரர் திடமாக, செம்மையாக வேதாந்தப் பாடம் நடத்தும் வல்லுநராக விளங்கிப் பலரையும் வேதாந்தத்திற்குள் ஆழங்கால் படவைத்தார். இவ்வாறு பதினைந்து ஆண்டுகள் நடைபெற்றன.

### திரும்ப அழைத்த சிதம்பரம் பணி

சீர் வளர் சீர் மகாதேவ ஞான தேசிகர் காசி போன்ற இடங்களுக்குத் தல யாத்திரை மேற்கொண்டார். அந்த யாத்திரையில் அவருடன் சோமசுந்தரரும் இணைந்து கொண்டு அருள் பெற்றார். இது முடிந்த நிலையில் சிதம்பரம் பொன்னம்பல சுவாமிகள் மடத்தின் காரியங்களைக் கவனிக்க சோமசுந்தரர் அனுப்பப் பெற்றார். அங்கு மடத்தில் சிலகாலம் வதிந்த சோமசுந்தரர் இப்பணியும் துறவிற்கு இடையீடானது என்று கருதி இதனை விடுத்து திருவாரூர் தட்சிணாமூர்த்தி மடத்திற்குப் பந்த பாசம் துறக்கச் சென்றுவிட்டார்.

இதனை அறிந்த அனைவரும் அவரை மீளவும் கோவிலூர் பணிக்கும் சிதம்பரம் பணிக்கும் அழைக்க எண்ணினர். சீர் வளர் சீர் மாகதேவ ஞான தேசிகரும், மற்றையோரும் வேண்டி விரும்பி அழைத்த நிலையில் தன் முடிவை மாற்றிக் கொண்டு மீளவும் சிதம்பரப் பணிக்கு வந்து சேர்ந்தார் சோமசுந்தரர்.

சிதம்பரம் பொன்னம்பல சுவாமிகள் மடத்திற்கு கும்பாபிடேகம் ஏற்பாடகி நடந்தது. அவ்விழாவில் சோமசுந்தரர் ஞான ஆசிரியராக அமர வைக்கப்பெற்று சிதம்பரம் கோ. சித மடத்தின் அதிபதியானார். சிதம்பரத்தில் பல சீர்திருத்தங்களைச் சோமசுந்தரர் மேற்கொண்டார். அருள்மிகு நடராசப் பெருமானுக்கு நடைபெற்று வந்த கொஸ்துக் கட்டளைச் சிறப்புடன் நடக்க ஆவன செய்தார் சோமசுந்தரர். மேலும் இளமையாக்கினார் கோயில், எறும்பூர் தத்துவராய சுவாமிகள் அருட்கோயில், போன்றன புதுப்பிக்கப்பெற்றுப் பூசை முறைகளும் சிறந்த முறையில் நடக்க ஆவன செய்யப்பெற்றன. மடத்திற்காகப் பல கிராமங்கள் வாங்கப்பெற்றன. பர்மாவில் நிலை மோசமாவதை

அறிந்து அங்கிருந்த மடத்தின் பொருள் செல்வங்களை இந்தியா வரப் பெரிதும் உதவினார் சோமசுந்தரர்.

மேலும் பல அரிய நூல்களை அச்சிட்டும் பணிகளையும் செய்தார் சோமசுந்தரர். பொன்னம்பல சுவாமிகளால் உரை எழுதப்பெற்ற பகவத் கீதை, கைவல்ய நவநீதம் போன்றவற்றையும், தத்துவராய சுவாமிகள் இயற்றிய பாடுதுறை என்னும் நூலையும் சிறந்த முறையில் வெளி யிட்டார் சோமசுந்தரர்.

**மறுத்தாலும் அடுத்தது இவரே**

இந்நிலையில் கோவிலூரின் அடுத்த பட்டமாக சோமசுந்தரர் ஆவதற்கான முறி எழுதப்பட்டு அது அவருக்குத் தெரிவிக்கபட்டது. இருப்பினும் அதனைத் தான் ”எதிர்பார்க்கவும் இல்லை. விரும்பவும் இல்லை ” என்று பதிலளித்தார் சோமசுந்தரர். இதிலிருந்து அவரின் துறவு மனப்பான்மை தெரியவருகிறது.

இந்நிலையில் ஏழாம் பட்டம் நிறைவுபெற ஆயிரத்துத் தொள்ளாயிரத்து நாற்பத்து ஆறாம் ஆண்டு ஆனிமாதத்தில் கோவிலூர் மடாதிபதியாக சீர் வளர் சீர் சோமசுந்தர ஞான தேசிக சுவாமிகள் பொறுப்பில் அமர்ந்தார். இக்காலத்தில் இந்திய அரசாங்கத்தார் இயற்றிய ஜமீன் ஒழிப்பு முறையை எதிர்கொண்டு கோவிலூரின் சொத்துக்களை வழக்காடி காத்த பெருமை இவரையே சாரும். ஆயிரத்துத் தொள்ளாயிரத்து ஐம்பத்தொன்றாம் ஆண்டு இந்து சமய அறநிலையத் துறையின் ஆளுகையில் இருந்து கோவிலூர் மடத்தை விடுவித்த பெருமையும் இவரையே சாரும்.

பொருள்வைத்த சேரி மடம், அதனருகில் அமைந்துள்ள அருள்மிகு சொர்ணபுரீஸ்வரர் ஆலயம் ஆகியவற்றை சீர் செய்து குடமுழுக்கினைச் சோமசுந்தரர் செய்வித்தார். சிருங்கேரியில் நடைபெற்ற அதிருத்ரசண்டிகா யாகத்திற்கு அழைக்கப்பட்ட சீர்வளர் சீர் சோமசுந்தர ஞான தேசிகர் அங்குச் சென்று காணிக்கைகள் வழங்கி, கோவிலூர் மடத்தின் வழிவழித் தொடர்பினை உறுதி செய்தார் சோமசுந்தரர்.

இதனைத் தொடர்ந்து சிருங்கேரி ஸ்ரீ ஆசாரியர் அபிநவ வித்தியா தீர்த்த சுவாமிகள் இராமேசுவர யாத்திரை மேற்கொண்ட நிலையில் கோவிலூரில் ஏழு நாட்கள் தங்கினார். இந்நாட்களில் நகரத்தார் ஊர்களுக்கு இருவரும் சென்று ஆசிர்வாதம் செய்தனர்.

கோவிலூரின் ஏழு மடங்களுக்கும் சீர் வளர் சீர் சோமசுந்தர சுவாமிகள் பொறுப்பாய் அமைந்து அவை மேம்பட பல வழிகளில் உதவினார். மேலும் இவர் வேதாந்தப் பாடங்களும் நடத்தி வந்தார். தனக்குப் பின் தக்கார் ஒருவரைக் கோவிலூர் மடத்திற்கு நியமிக்க எண்ணம் கொண்டு, திருவண்ணாமலை ஈசானிய மடத்தில் இருந்த இராமநாதரை உரியவராகச் சோமசுந்தரர் கண்டுகொண்டார்.

இவ்வாறு இவரின் அருள்பணி தொடர்ந்து வந்த நிலையில் சாதாரண ஆண்டு மாசித்திங்கள், நான்காம் நாள் காலை முதல் தம்பணிகளில் கவனம் செலுத்தி வந்த சீர் வளர் சீர் சோமசுந்தர சுவாமிகள் தம் குருநாதர் சீர் வளர் சீர் அண்ணாமலை ஞான தேசிக சுவாமிகளின் அருள்கோயிலில் சிறப்பு அபிடேகம் செய்து, மகேஸ்வர பூசையில் கலந்து கொண்டு பின்பு பிரம்ம சபையில் அடியார்களுக்கு அருள்பாலித்து வந்தார்.

இந்நாளில் மாலை ஆறுமணி அளவில் சீர் வளர் சீர் சோமசுந்தர ஞான தேசிகர் விதேக கைவல்லியத்தை அடைந்தார்.

# நல்லன எல்லாம் தரும் சுந்தர காண்டம்

பகுதி-10

## அக்ககுமாரன் வதைப்படலம்

[50 பாடல்கள்]



முனைவர் சரசுவதி இராமநாதன்,
பள்ளத்தூர்

'வெற்றி' என்ற சொல்லை மட்டுமே அறிந்திருந்த இராவணன் இப்போது அடிமேல் அடிவாங்கிக் கொண்டிருந்தான். கிங்கரர், சம்புமாலி, பஞ்சசேனாபதிகள் எனப் பலரும் அனுமனால் கொல்லப்பட்டது அறிந்து, தானே அடங்காச் சீற்றத்துடன் போருக்கு எழுந்தான். அட்சகுமாரன் எனும் மகன் (மண்டோதரி மகன், இந்திரசித்தனின் தம்பி) தடுத்து வணங்கி சில சொற்கள் கூறினான். 'நீங்கள் எதிர்க்கப் போவது சிவனின் வாகனமான நந்தியையா! திருமால் ஏறிவரும் கருடனையா! ஆதிசேஷனையா! ஓர் அற்ப குரங்கை நீங்கள் எதிர்க்கப்போவது அழகா! எனக்கு ஆணையிடுங்கள். முன்பு இந்திரனோடு போரிட என்னை அனுப்பாமல் அண்ணன் இந்திரசித்தை அனுப்பியதே எனக்கு வருத்தம் தான். அக்குறை தீர, இப்போதாவது என்னை அனுப்புங்கள். குரங்கை விரைவில் பிடித்துக் கொண்டு வந்து, உங்கள் குறை தீர்ப்பேன்!" என்றான். தசகண்டன் மகிழ்ந்து விரைவில் தேரேறிப் புறப்படுக' என விடை தந்தான்.

"பொரு கடல் மகரம் எண்ணில்,
எண்ணலாம் பூட்கை; பொங்கித்
திரிவன மீன்கள் எண்ணில்,
எண்ணலாம் செம் பொன் திண் தேர்;
உரு உறு மணலை எண்ணில்,
எண்ணலாம் உரவுத் தானை;
வரு திரை நிரையை எண்ணில்,
எண்ணலாம் வாவும் வாசி"

(பா.940)



கடலில் உள்ள சுறா மீன்களை எண்ணி விட்டால் யானைகளைக் கணக்கிட்டுச் சொல்லலாம். மீன்களை எண்ணி விட்டால் தேர்களை எண்ணி விடலாம். மணலை எண்ணிடலாம் என்றால் சேனை வீரரை எண்ணிச் சொல்ல முடியும். அலைகளை எண்ணிவிட்டால் குதிரைகளை எண்ணலாம். அந்த அளவு கணக்கிலடங்காச் சேனை அக்ககுமாரனுடன் சென்றது.

நான்கு லட்சம் வீரர் பின்வர அக்ககுமாரன் வைத்திருந்த மரம், உலக்கை, சூலம், கோடாலி, வச்சிராயுதம், அங்குசம், அம்பு, வில், கோல், ஈட்டி, வாள், எழுமரத்தடி, பாசக்கயிறு, தண்டு, வளைதடி, வைவேல், கப்பணம், சக்கராயுதம் இவற்றின் ஒளி, மின்னல் வெட்டியது போலவும், வெயில் வீசியது போலவும் தெரிந்தன. சோலையோ கழுகு, காகம், பேய்கள், யமன் இவற்றின் இருப்பிடமாயிருந்தது. சில கெட்ட சகுனங்கள் தோன்றின.

தேர்களில் பூட்டப் பெற்ற குதிரைகள் தூங்கி வழிந்தன. அரக்க வீரர்களின் இடது கண்கள், இடது தோள்கள் துடித்தன (பெண்களுக்கு இடது கண்கள் இடது தோள்கள் துடித்தால் நல்ல சகுனம் என்பர்!) மேகங்கள் இரத்தத் துளிகளைச் சொரிந்தன! தேன் சொரியும் மலர் மாலையணிந்த அட்சகுமாரனின் வருகையை அனுமன் பார்த்தான்.

“இவன் தசமுகனாக இல்லை! அவன் மகன் இந்திரசித்தனாகவும் தெரியவில்லை! யாராயினும் சரி! உயிர்கொல்ல நானும், என்னுடன் எமனும் நிற்கிறோம்!” என வாயுகுமாரன் நினைக்க ‘இந்தக் குரங்கா இத்தனை அரக்கர் படையைக் கொன்றது?’ என அக்ககுமாரன் நினைக்க எதிர் எதிரே நின்றனர்! அக்கனின் தேர்ச்சாரதி, உங்கள் தந்தையை வென்று வாலில் கட்டியது ஒரு குரங்கன்றோ? ஆகவே உருவுகண்டு இகழாது, பார்த்துப் போரிடு என்றான்.

ஆரவாரத்துடன் வந்த அரக்கர் சேனை அனுமனைச் சூழ்ந்து கொண்டது! அட்சகுமாரனோ” உலகில் இனி குரங்கு எதுவுமே இல்லாமல், கருவில் உள்ள குரங்குகளையும் அழிப்பேன்” என்று சினத்துடன் வந்தான். பற்றி எரியும் நெருப்பு, காய்ந்த புல்லை எப்படி விரைவில் அழிக்குமோ,

அது போல் அனுமன் அரக்கர் படையை அழித்தான் என்பது இங்குக் கம்பன் தரும் உவமை. அனுமனுக்கு உதவ யமன் பக்கத்திருந்தானும்! அரக்கர்கள் புழு மாதிரிக் கூழ் ஆனார்கள். தேரே பட்டன அதிகம் என்பதா? பரியே பட்டன அதிகம் என்பதா! ஊழித் தீப்போல் பாய்ந்த அனுமனிடம் அரக்கர் படை பட்டபாடு நவிலும் தரமா?

இரத்தப் பேராறு பெருகியது. இப்போது அக்ககுமரன் அனுமன் எதிரே தேரில் நின்றான். பதினான்கு அம்புகளை அக்ககுமாரன்விட, இரும்புத்தூண் ஒன்றால் அவற்றை அடித்து வீழ்த்தினான் அனுமன்! பாய்ந்து வந்த அனுமன் அக்கனுடைய தோளைப் பற்றி ஏறி அமர்ந்தான்! கன்னத்தில் அறைந்தான். அக்கனின் ஆபரணங்கள் சிதறின. அவனைக் குத்தித் தள்ளிய அனுமன் போர்க்களமே அம்மியாக, சதைத் துண்டுகளை இரத்தம் எனும் நீர் ஊற்றி, வயிரம் பாய்ந்த தூண் போன்ற தோள்களால் தேய்த்தான். ஊழியின் உலகு ஏழும் தேயினும் ஒரு தன்புகழ் இறை தேயாதான்! என்ன சொல்லாட்சி பாருங்கள். ஊழி தேயலாம் அனுமன் தேயாத புகழ் உடையவன் என்றார். எஞ்சிய அரக்கர், மீன் போலக் கடலில் ஒடித் தப்பினர். சிலர் பிணக்கூட்டத்தில் மறைந்தனர். சிலர் தம் ஆயுதங்களைப் போட்டுவிட்டு முதுகு காட்டி ஓடினர்! சிலர் அனுமன் எதிரே தொழுது நின்றனர். அரக்கியர் சிலர் களத்தில் தம் கணவர் உடலைத் தேடினர். சிலர் அங்கேயே பிணத்தைக் கண்டு தழுவி, உடன் உயிர் விட்டனர்! தன் உயிர்க்கொண்டு கணவன் உயிரைத் தேடினரோ!

காவலர் ஓடிச் சென்று அக்கன் உயிர் போய்விட்டது எனச் சொல்ல, மண்டோதரி வயிற்றலடித்துக் கொண்டு கதறினார். இராவணனின் துயர் சொல்லும் தரமா! தேவர்கள் உள்ளே மகிழ்ந்து, ஒப்புக்கு அழுதார்கள் என்ன ஆனாலும் புத்தரசோகம் யாருக்கும் வரக் கூடாது.

## பாசப்படலம்

(62 பாடல்கள்)

அரக்கன் என்றாலும் ‘பாசம்’ என்பது உயிர் இயற்கை. இந்திரசித்தன் தன் தம்பியின் மரணச் செய்தி கேட்டுத் துடித்தான்.

தம்பியை உன்னும்தோறும், தாரை நீர் ததும்பும் கண்ணான்,
வம்பு இயல் சிலையை நோக்கி, வாய் மடித்து உருத்து நக்கான்;
‘கொம்பு இயல் மாய வாழ்க்கைக் குரங்கினால், குரங்கா ஆற்றல்
எம்பியோ தேய்ந்தான்? எந்தை புகழ் அன்றோ தேய்ந்தது?’ என்றான். (பாடல் 987)

எனக் குமுறினான். திரிபுரத்தை எரிக்கச் சிவபெருமான் புறப்பட்டதைப் போல் எழுந்தான்! அழுது புலம்பி ஆவதென்ன! குரங்கைக் கொல்ல வேண்டும் என்ற மனநிலையுடன், தந்தையின் திருவடிகளில் பணிந்தான்.

‘ஒன்று நீ உறுதி ஓராய்; உற்றிருந்து உளையகிற்றி,
வன் திறல் குரங்கின் ஆற்றல் மரபுளி உணர்ந்தும், அன்னோ!
“சென்று நீர் பொருதிர்” என்று, திறத் திறம் செலுத்தி, தேயக்
கொன்றனை நீயே அன்றோ, அரக்கர்தம் குழுவை எல்லாம்? (பா.991)

குரங்கின் ஆற்றல் தெரிந்தும் வரிசை வரிசையாகக் கிங்கரர், சம்புமாலி, பஞ்ச சேனாபதிகள், அட்சகுமாரன் என்று அனுப்பி நீயே அவர்களைக் கொல்வித்தாய்! அது சாதாரணக் குரங்கல்ல அப்பா! மும்மூர்த்திகளும் சேர்ந்த வடிவம் போலும்! ‘ஆனாலும் ஐயனே! அக்குரங்கை நானே சென்று ஏய் எனும் நேரத்தில் பிடித்துக் கொண்டு வருவேன்’ என நம்பிக்கை தந்துவிட்டுப் புறப்பட்டான். பிரளய காலமதில் தனியே நிற்கும் மேருமலை போல நின்றான். அவனைச் சுற்றிப் பெரும்படை நின்றது.

### வீரத்தை மதித்த வீரன்

உலகெல்லாம் கலக்கி வென்ற வீரன் இந்திரசித்தன் இப்போர்க்களத்தைப் பார்த்ததும், ஒரு குரங்கு இத்தனை அரக்கர்களைக் கொன்று இவ்வளவு அழிவை ஏற்படுத்தியுள்ளது என்றால் அதன் வீரம் மகத்தானது! ஆமாம் ஒரு குரங்கால் இத்தனை அரக்கர் அழிந்துவிட்டனரே இராமன் போரிட வந்தால் அவனை எந்தப் படையைக் கொண்டு வெல்வது? என யோசித்தான். இறந்து கிடந்த படை வீரர்களைப் பார்த்ததும், தன்மானத்தால் கொதித்துப் போனான்! கானில் என் அத்தை சூர்ப்பனகை அவமானப்பட்டதும், கரன் முதலானோர் இறந்ததும், தம்பி அட்சகுமாரனின் மரணமும், மானிடர் இருவராலும், ஒரு குரங்காலும் நடந்தன என்றால் என் வீரம் மிக அழகுதான்! என விம்மினான். கூழாய்த் தேய்க்கப் பெற்ற தம்பி உடலைப் பார்த்ததும் சோகத்தை விடச் சினம் மேலெழுந்தது! இலை போல வடிவுள்ள வேலையுடைய இராவணனின் சினத்தை நினைத்தால் இயமன் கூட உன் உயிரை எடுக்க அஞ்சுவானே! யார் உன் உயிர் கவர்ந்தாலும் நான் விடுவேனா! என அனுமன் முன் வந்தான். அனுமனோ, ‘இந்த வீரனை நான் கொன்றால் தசமுகனையும் விரைவில் அழித்து விடுவேன்! சீதையையும் மீட்டழைத்து இராமனிடம் சேர்க்கலாம்! என நினைத்தான். உடனே ஓர் ஆச்சாமரத்தைக் கையில் எடுத்துக்கொண்டு பெரிய உருவம் எடுத்தான் அனுமன்!

(தொடரும்)

## சமய எழுச்சியால் சமூக மறுமலர்ச்சி காட்டிய

# அப்பர்

பகுதி – 6

## சிற்பக்கலை எழுச்சியில் அப்பர் பதிகங்கள்




**திருமதி மு. சுப்புலட்சுமி,**
வரலாற்றாய்வர்
ஆசிரியர்: www.glorioustamils.com, www.attraithingal.com,
வலையொலி/ podcast
அற்றைத்திங்கள்...
வலையொலியில் தமிழொலி


திருத்தொண்டின் நெறியால் தமிழகமெங்கும் சிவ வழிபாடு செழிக்கப் பயணப்பட்ட திருநாவுக்கரசர், தலைமுறைகள் தாண்டியும் சைவம் நிலைத்து நிற்கவேண்டி மற்றுமொரு பணி செய்தார். அந்தப் பணி, தமிழகத்தில் ஏற்கனவே பரவியிருந்த புராணக் கதைகளின் சாரத்தைப் பதிகவடிவில் ஆவணப்படுத்தியது. புராணச் செய்திகள் செறிந்த பதிகங்களை அடியவர்கள் நெக்குருகிப் பாடப்பாட, அதுவரையில் செவிவழிப் பத்திமைச் செய்திகளாக மட்டுமே வலம்வந்தவை உருகவைக்கும் கதைகளாகவும், கதைமாந்தர் வாழ்வின் நிகழ்வுகள் அல்லவை அழிய நல்லவை தழைக்கச் செய்யும் அறவுரைகளாகவும், பாட்டுடைத் தலைவன் பேராற்றலுடை இறைவனாகவும் சமயம் பரப்பிடப் பேருதவி புரிந்தன.

அப்பர் தம் பதிகங்களால் புகழ்க்கூட்டிய புராணச் செய்திகளை, தாம் உருவாக்கிய கோயில்களில் சிற்பவடிவில் வழங்கி அடுத்த நிலைக்குக் கொண்டு சென்ற முதன்மைப் பெருமை பல்லவ மன்னர்களையே சாரும். அப்பர் பாடல்களைக் கொண்டுமட்டுமே பல்லவ அரசர் அச்சிற்பங்களை அமைத்தனர் என்பதற்கு நேரடிச் சான்றுகள் ஏதுமில்லை; அங்ஙனம், வியப்பில் கண்கள்

மூடமறக்கும் தலைசிறந்த சிற்பங்களை வழங்கிய பல்லவர்களின் கலைவளர்த்த பெருமைகளையெல்லாம் அப்பரின் பதிகங்களுக்கு மட்டுமே தந்துவிடுவது முறையுமன்று.

மகேந்திரர் காலத்தில் ஏற்பட்ட கோயில் கட்டடக்கலை மற்றும் சிற்பக்கலை வளர்ச்சி, தொடர்ந்த பல்லவ அரசர்களால் பேரெழுச்சி பெற்றநிலையை வரலாற்றறிஞர்கள் ஆய்வுவழி கண்கூடாக விளங்கவியலும். அவ்வகையில், பல்லவர்கள் உளியோவியங்களாகப் படைத்ததில் சாகாவரம் பெற்ற புராண முயலகனும், இறைவன் கையேந்திய சூலமும் மழுவும், பேரெழில் சிவவடிவமான வீணாதரரும், பத்திமைச் சிற்பங்களுக்கு அப்பர் வழங்கிய பெருங்கொடை என்பதை அவர் பாடல்கள்வழி பகிர்வதே இக்கட்டுரை.

### அப்பர் பாடல்களில் முயலகன்


திருச்சிராப்பள்ளி கங்காதரர்

தேவார முன்னவர்க்கு முன்னரே, சிவபெருமான் உடுத்திய உடை புனைந்த அணிகலன்கள் ஏந்திய பொருட்கள் உட்பட ஆடலில்வல்ல இறைவனின் திருவுருவத் தோற்றத்தைத் தம் சொற்களில் வழங்கியவர் காரைக்கால் அம்மையார். இறைவனின் திருவுருவங்களான இலிங்கோத்பவர், காலனையுதைத்தவர், காமனையெரித்தவர், இராவணன் செருக்கடக்கியவர், பிச்சைத் தேவர், திரிபுரமெரித்தவர், யானைத்தோல் போர்த்தவர், அர்ச்சுனனுடன் போர் புரிந்தவர் மற்றும் விடையேறுடையரையும் குறித்தார் அவர்.

தாருகாவன முனிவர்களின் ஆணவமடக்கி இறைவன் தன்னுடன் சேர்த்துக்கொண்ட புலி, மான், மழு, பாம்பு ஆகியவற்றைப் பாடும் அம்மை, தீயை இடுகாட்டில் ஆடும் இறைவனின் மையக் குறியீடாக அமைத்தார். இத்தனையும் பாடிய அம்மையின் பாடல்களில் முயலகன் இடம்பெறவில்லை.

திருமூலர் வரிகளில், அண்டப் பெருவெளியை அம்பலமாகக் கொண்டு ஆடுமிறைவனுக்கு ஆகாயமே உடல்; உயிர்களின் ஆணவ மலமே முயலகன்; எட்டுத் திசைகளே எட்டுக் கைகள், என்று முயலகனை ஆணவத்தின் அடையாளமாகக் காணமுடிகிறது.

ஆகாசமாம் உடல் ஆங்கார் முயலகன்
ஏகாசமாம் திசை யெட்டும் திருக்கைகள்
(10. 09ஆம் தந்திரம்.15.13)

நாவுக்கரசருடைய பாடல்களில்தான், முயலகன் செருக்கை அழித்தல்பொருட்டு இறைவன் அவனைக் காலால் அழுத்தி அடக்கிவைப்பது காட்டப்படுகிறது. திருக்கஞ்சனூர் பதிகத்தில் ‘தருக்கழிய முயலகன்மேல் தாள்வைத்து’ (06.90.09)

அறத்தை நிலைநாட்டுகிறார் சிவபெருமான். திருவாரூரிலோ இன்னும் ஒரு படி மேலே சென்று, 'பாதத்தால் முயலகனைப் பாதுகாத்துப் பாரகத்தே பரஞ்சுடராய் நின்ற நாளோ' (06.34.08) என்று பாதத்தால் முயலகனை அழுத்தியடக்கி உலகையே பாதுகாப்பதாக விதந்தோதுகிறார் அப்பர்.

சிவனார் திருவுருவை மிக அழகாகக் கண்முன் நிறுத்தும் மற்றொரு பாடலில், முடியில் வெண்திங்களும் இளநாகமும்; அடியில் சிலம்பும் கழலும்; அடியின்கீழ் முயலகனும்; வலக்கையில் மழுவும்; இடப்பாகத்தில் திருமாலும் கொண்டு, துடியேந்திய இறைவன் தோள்மேல் கங்காளம் தாங்கி நிற்கிறார்.

அடிகொண்டார் சிலம்பலம்பு கழலு மார்ப்ப
அடங்காத முயலகனை அடிக்கீழ்க் கொண்டார்
(06.96.03).

இறைவன், அடங்காத முயலகனை அடிக்கீழ்க் கொண்ட மிகத்தெளிவான சுட்டல் மகேந்திரரைக் கவர்ந்திருக்க வேண்டும். முயலகனைச் சிற்பத்தில் முதன்முதல் கொணரும் திட்டத்தை அமைத்தவர் இடத்தையும் செவ்வனே தேர்வு செய்தார்போலும். தமிழ்நாட்டுக் கோயில் கட்டடக் கலை மற்றும் சிற்பக்கலை வரலாற்றில் பல முதல்களுக்குச் சொந்தக்காரரான மகேந்திரர், தம் சீயமங்கலக் குடைவரையில் (அவனிபாஜன பல்லவேஸ்வரம்) இடதுபதம் தூக்கிய முதல் ஆடவல்லானைச் சிற்பத்தில் அறிமுகப்படுத்தினார்; ஆனால் அங்கு முயலகனைச் சேர்க்கவில்லை.

அச்சிற்பம், கார்க்கோடகன் என்ற பாம்பின் தீண்டலைத் தவிர்க்க சிவபெருமான் காலுயர்த்தி ஆடியதாகக் கூறும் சகளாதிகாரத்தின் மிகச்சிறந்த தழுவல் என்று விளக்குகிறார் டாக்டர் இரா. கலைக்கோவன். எனவேதான் அங்கு பாம்புண்டு, முயலகன் இல்லை.



ஆடவல்லான், சீயமங்கலம்

நன்றி: https://tamilnadu-favtourism.blogspot.com/2016/09/avanibhajana-pallaveshwaram-temple.html

ஆனால், தம்முடைய திருச்சிராப்பள்ளிக் குடைவரையில் (லளிதாங்குர பல்லவேஸ்வரகிருஹம்), தமிழ்நாட்டின் முதல் கங்காதரரோடு சிற்பத்தில் முதல் முயலகனையும் இடம்பெறச் செய்தார் மகேந்திரர். நளினமான தோற்றத்திலும் கண்கவர் மிடுக்குடன் மயக்கும் கங்காதரர், வலக்காலை முயலகனின் தலைமேல் வைத்துள்ளார். முயலகனின் இடக்கை சிவனின் கால்களைப் பிடித்துள்ளது.

### 2. மழுவும் சூலமும்

சிவபெருமான் பற்றிய குறிப்புகள்

சங்கப்பாடல்களில் ஆங்காங்கே காணப்பட்டாலும், சங்ககால இறுதிக்கட்ட நூலான கலித்தொகையிலும் காப்பியக்காலச் சிலப்பதிகாரத்திலும் கூடுதல் செய்திகளைக் காணமுடிகிறது. தாருகாவனத்துப் புராணக்கதை எங்கும் கூறப்படவில்லையெனினும், முனிவர்கள் ஏவியவற்றைத் தம் கையிலேந்திய இறைவன் பத்திமைக்காலத்துக்கு முன்னரே வந்துவிடுகிறார்.

அவற்றில், சங்ககாலத்து மழுவும் சிலம்பு காட்டும் சூலமும் அப்பராலும் சம்பந்தராலும், தீயவற்றை அழிக்கும் இறைவனின் போர்க்கருவிகளாகப் பேரளவில் பேசப்படுகின்றன.

காரைக்கால் அம்மையார், கொடுவெண் மழுவும் பிறையுந்ததும்பப் படுவெண்துடியும் பறையுங்கறங்கப் பரமனின் ஆடலோடு மழுவும் உடனசைவதைக் குறிக்கிறார் (11.002.20).

வாகீசர் சிவன் கை மழுவை மேலும் தெளிவுபட விளக்குகிறார். அவர்

வலக்கையில் மழுவேந்தியவர் ‘மலர்க்கூந்தல் உமையாள் காதல் மணவாளனே வலங்கை மழுவாளனே’ (06.04.09)

ஒளிரும் வெண்மழுவைப் பயன்படுத்துவதில் வல்லவர் ‘வடிவிளங்கு வெண்மழுவாள் வல்லார்’ (06.21.04) என்கிறார்.

இறைவன் மழுவேந்திய காரணம்தான் என்ன என்று கேள்வியெழுந்தால், அதற்கும் விடையுண்டு அப்பரிடத்தில் வானளாவும் அலைகடல் சூழ்ந்த உலகினைக் காக்கவேண்டி, கூரிய மழுவினை ஏந்தியுள்ளார் அவர்.

.....வானத் திரைகடல் சூழுல கம்மிதனைக்
காப்பது காரணமாகக் கொண்டான்கண்டி யூரிருந்த
கூர்ப்புடை யொள்வாண் மழுவனை யாமண்டர் கூறுவதே (04.93.06)

இறைவன் சூலமேந்தியவர் என்பதை இளங்கோவடிகள், காடுகாண் காதையில் மாங்காட்டு மறையோன் வாயிலாக நமக்குரைக்கிறார். கோவலனுக்கு மதுரை செல்லும் வழியுரைக்கும் மறையோன்

கொடும்பை நெடுங் குளக் கோட்டகம் புக்கால்
பிறை முடிக் கண்ணிப் பெரியோன் ஏந்திய
அறை வாய்ச் சூலத்து அரு நெறி கவர்க்கும்
(சிலப்பதிகாரம் மதுரைக்காண்டம், காடு காண் காதை, 7173)

என்கிறான். கொடும்பாளூரின் நெடுங்குளப் பகுதியை அடைந்தால், சடையில் பிறையேந்திய பெரியவனாகிய சிவனின் சூலம்போல வழி பிரியுமாம். இங்கு சூலத்தின் மூன்று பிரிவுகள் பற்றிக் குறிப்பில்லையே என்ற வினா எழலாம். தொடரும் வரிகளைப் படித்தால், வலப்பக்கம் சென்றால் கடக்கும் பகுதிகள் இடப்பக்கம் செல்லும் பாதை இவ்விரண்டையும் விடுத்து நேராகச் செல்கையில் அடையுமிடங்கள் என்று மூன்று பாதைகளைக் கூறி, புவியிடங்காட்டுகிறார் சிலம்பின் ஆசிரியர்.

மூன்று ஈட்டிகளையுடைய சூலத்தை அப்பரும் சம்பந்தரும் மூவிலை வேலென்று குறிப்பிடுகின்றனர். முத்தீயனையதோர் மூவிலை வேல்பிடித்தவரென்றும் முந்தி வாயதோர் மூவிலை வேல்பிடித்தவரென்றும்

அப்பர் கூறுகிறார். இதே மூவிலை வேலுடைய மற்றொருவன் உண்டு. அவன் கூற்றுவன்.

காலனை உதைத்துச் சாய்த்த திருக்கடவூர் வீரட்டனாரைப் பாடும் நாவுக்கரசர் (04.107), மூவிலை வேலுடைக் காலனைத் தானலற வைத்த சேவடியானென்றும் மார்க்கண்டேயனுக்காய்ச் சூலமும் பாசமுங் கொண்டு தொடர்ந்தடர்ந் தோடிவந்த காலனைக் காய்ந்த பிரானென்றும் போற்றுகிறார். காலனைக் காய்ந்த பிரான், அவன் கொண்டிருந்த சூலமும் பாசமும் தன் கையிலெடுத்து அவனை உதைத்ததைப் பல்லவர் கற்றளிகள் நம்கண்முன் காட்டும்.



காலனை உதைத்தவர், காஞ்சி கைலாசநாதர்

நன்றி: லலிதாராம், அரை நாள் பயணம்.... அரை மனதுடன்...., வரலாறு.காம்

**இறைவன் கையில் ஏந்திய ஒளிபொருந்திய சூலம் எதனால் ஆனது?**

திருகழிப்பாலையில் இரும்பார்ந்த சூலமேந்தியவர், வீழிமிழலையில் பொன்னால் செய்த வடிவழகுடைய சூலம் வைத்திருக்கிறார். திருச்சோற்றுத்துறை யிலோ, வண்ணச்சூலம் கைக்கொண்டிருக்கிறார். இறைவனை அளவில்லா நேசத்துடன் வணங்கும் அப்பருக்கு, சுட்ட உடல்களையெரித்த சாம்பலைப் பூசிய சிவன் பேரழகனாகத் தெரிய திருநள்ளாறில், 'சுட்டங்கங் கொண்டு துதையப் பூசிய பெருமான், 'சுந்தரனாய்ச் சூலங்கை யேந்தினான்' என்று உருகுகிறார்.

சுற்றிய பூதப் படையும் சூலமும் மழுவும் மானுமேந்திய பெம்மான் ஒருவனே நம்மைக் காக்க வல்லவன் என்று தொடர்ந்துரைக்கும் அப்பர், சூலத்தின் சிறப்பைச் சைவக் குறியீடாக மாற்றியெழுதுகிறார்.

பொன்னார் திருவடிக் கொன்றுண்டு விண்ணப்பம் போற்றிசெய்யும்
என்னாவி காப்பதற் கிச்சையுண் டேலிருங் கூற்றகல
மின்னாரு மூவிலைச் சூலமென் மேற்பொறி மேவுகொண்டல்
துன்னார் கடந்தையுட் டூங்கானை மாடச் சுடர்க்கொழுந்தே (04.109.01)

திருப்பெண்ணாகடம் என்று வழங்கப்படும் கடந்தை தூங்கானைமாடக் கோயிலில், உலகோருக்குத் தாம் சைவ நெறியாளரென்று ஐயமின்றி அடையாளப்படுத்த மூவிலைச் சூலத்தைத் தன்மேல் பொறிக்கவேண்டி இறைவனிடம் விண்ணப்பிக்கிறார். சூலத்தோடு 'இடவம் பொறித்தென்னை யேன்றுகொள்,' என்று சைவர் அடையாளங்களைப் பாடலில் பொதிந்து வைக்கிறார்.

குடிகள் அச்சமின்றி அமைதியுடன் வாழ, அவர்களின் தலைவன் தலைசிறந்த வீரனாயிருத்தல் வேண்டுமன்றோ. பொற்சூலமும் போர்புரியும் ஆற்றலுடைய விடையும் வினைகளை வெல்லும் நாகமும் வெண்மழுவும் கொண்ட இறைவனைக் காட்டி அவர் வலிமையைப் பறைசாற்றுகிறார் அப்பர் (05.012.03). சங்ககால முருகனையும் கொற்றவையையும் விஞ்சிய ஆற்றலும் போர்த்திறமும் கொண்ட ஒருவராகச் சிவனை அட்டவீரட்டச் செயல்களோடு உடனுறை மழுவும் சூலமும் ஓங்கி நிற்கச் செய்தன. பல நூற்றாண்டுகளாக மெல்ல மெல்ல ஏற்பட்ட இம்மாற்றம் பேரியக்கமாக வளர்ந்தது அப்பருடைய காலக்கட்டத்திலெனில், அந்தப் பேரியக்கம் கோயில் சிற்பங்கள்வழி எழுச்சி பெற்றது முதல் மகேந்திரர் ஆட்சியில்.


நந்தியணுக்கர்

நன்றி: ச.சுந்தரேசன், சீயமங்கலம் அவனிபாஜன பல்லவேஸ்வரம், வரலாறு. காம்

சீயமங்கலத்தில் உமையுடன் நிற்கும் நந்தியணுக்கர் கோட்டத்தில் சிவனாரின் இடக்கைக்குப் பின்னால் சூலத்தைப் பதித்தார் மகேந்திரர். சத்ருமல்லர் இல்லையா அவர்? கூடுதலாக, இறைவனின் இரண்டு போர்க்கருவிகளுக்கும் உருகொடுத்து மழுவடியாராகவும் சூலதேவராகவும் வாயிற்காவலில் நிற்கவும் வைத்தார்.

தளவானூர் சத்ருமல்லேசுவரர் குடைவரையில் தமிழகத்தின் முதல் மழுவடியாரையும் சீயமங்கலத்தில் முதல் சூலதேவரையும் அமைத்த பெருமை மகேந்திரருக்கே உரியதென்பதை நமக்குரைக்கிறார் டாக்டர் இரா. கலைக்கோவன்.


சூலதேவர், சீயமங்கலம்

நன்றி: https://commons.wikimedia.org/wiki/File:Seeyamangalam_dvarapala1.JPG

மகேந்திரரைத் தொடர்ந்த பல்லவர் கற்றளிகளில் சிவனாரின் வீரங்காட்டும் சிற்பங்களில் மழுவும் சூலமும் விளங்கிநிற்பதைக் காணமுடியும்.

வீரனொருவனால் கிட்டும் பாதுகாப்புணர்வு தரும் அமைதியோடு

உடன்வரும் மற்றோருணர்வு அச்சம். மழுவும் சூலமுமேந்தித் தீயவரையழிக்கும் இறைவனின் செயல்கண்டு எளியோர் அஞ்சுவது இயல்புதானே? ஆனால், அஞ்சுவது யாதொன்றும் இல்லை என்றுரைத்த அப்பரும் சரி, மற்ற பத்திமை ஆசிரியர்களும் சரி, உமையின் அச்சத்தை அவ்வப்போது சுட்டுகின்றனர்.

விரித்தபல் கதிர்கொள் சூலம் வெடிபடு தமருகம் கை

தரித்ததோர் கோல கால பயிரவனாகி வேழம்

உரித்து உமை அஞ்சக் கண்டு ஒண் திருமணிவாய் விள்ளச்

சிரித்து அருள் செய்தார் சேறைச் செந்நெறிச் செல்வனாரே (04.73.06)

விரித்தபல் சூலமும் வெடிபடு தமருகமும் வேழமுரித்து உடுத்திய ஆடையுமாய்க் காலபைரவர் தோற்றத்தில் நின்றவரைக் கண்டு உமையஞ்ச, திருமணிவாய் விள்ளச் சிரித்து அருள்செய்தாராம் இறைவன். கொவ்வைச் செவ்வாயில் குமிழ்சிரிப்பிற்காக மனிதப் பிறவியை வேண்டியவரல்லவா? திருமணிவாய் விள்ளச் சிரித்த ஒற்றை வரியில், சம்பந்தரின் உள்ளங்கவர் கள்வனையும் ஈர்த்து மாணிக்கவாசகரை ஆட்கொண்ட பெருமானையும் ஒருசேரக் காட்டிவிடுகிறார் நாவுக்கரசர்.

உமைக்கு மட்டுமல்ல அன்பர்கள் அனைவருக்கும் இனியவர் இறைவன் என்பதை வலியுறுத்த, மழுவமர் கையராகவும் எழுநுனை வேலராகவும் எலும்பணிந்த சிவபெருமான், தொழுதெழுந் தாடிப்பாடித் தோத்திரம் பலவுஞ் சொல்லி அழுமவர்க்கு அன்பரானவர் என்று அழுந்தச் சொல்லி வைக்கிறார் (04.56.04).

## 3. அப்பர் பாடல்களில் வீணாதரர்



'அத்யந்தகாம பல்லவேசுவர கிருகத்தில்' வீணாதரர்

நன்றி: லலிதாராம், இராஜசிம்மர் கலைப்பட விருந்து (புகைப்படத்தொகுப்பு), வரலாறு. காம்

சிவனின் அச்சமூட்டும் பேராற்றலைப் போற்றிய நாயன்மார், அவரை அன்புடை அணுக்கராக மெச்சியதோடு பன்முகக் கலைஞராகவும் மிடுக்குடை நளினத்துடன் காட்டத் தவறவில்லை. ஆடலில் வல்லவராகவும் கருவியிசைக் கலைஞராகவும் பண்ணோடு இசைப்பாடப் பயின்றவராகவும் பதிகங்களில் பெருமான் மிளிரக் காணலாம். அத்தகு மனங்கவர் வடிவங்களில் ஒன்றே வீணாதரர் படிமம்.

தோல், துளை, நரம்பு, கஞ்சக்கருவிகள் என்று நால்வகை இசைக் கருவிகளைச் சங்ககாலந்தொட்டே தமிழ்ப் படைப்பாளர்கள் பதிவு செய்ய, நரம்புக் கருவிகளுள் யாழுக்கு முதன்மையிடம் இருந்தது தெரிகிறது. சங்கப் பாடல்களில் குறிக்கப்பெறாத வீணை சிலப்பதிகாரத்தில் முதல் குறிப்பு பெறுகிறது.

இதுகாறும் கிடைக்கப்பெற்ற

இலக்கியங்களில், வீணையென்ற சொல்லை எழுத்துருவில் தமிழுலகிற்கு அறிமுகப்படுத்தியவர் இளங்கோவடிகளே. இந்திரன் அவையில் ஊர்வசி நாரதரின் இசைக்கு ஆடாதாவளாக நிற்க, அகத்தியரின் சாபம் பெற்று மண்ணுலகில் மாதவியாகப் பிறப்பெடுக்கும் கதையைக் கடலாடு காதையில் கூறுமிடத்தில், 'நாரதன் வீணை நயந்தெரி பாடலும்' என்று கூறுகிறார் ஆசிரியர். இதற்கு உரையெழுதும் அடியார்க்கு நல்லார், 'யாழாசிரியனாகிய நாரத முனிவன் யாழின் ஏழிசையிசையின்பமும் தெரியப்பாடும் பாடலும்,' என்று வீணைக்கு யாழென்றே பொருள் தருகிறார்.

பத்திமைப் பதிகங்களில் வீணையை இறைவனுடைய ஆடலுக்குதவு கருவியாகவும் அவரே இசைக்கும் கருவியாகவும் முன்வைப்பவர் காரைக்கால் அம்மை. அம்மையின் இடுகாட்டு ஆடலிறைவன், சச்சரி, கொக்கரை, தக்கை, தகுணிச்சம், துந்துபி, தாளம், வீணை, மத்தளம், கரடிகை, தமருகம், குடமுழா, மொந்தை என்று பற்பல இசைக் கருவிகளை இசைத்த வண்ணம், ஒப்பற்றவராக ஒப்பில்லா நடனத்தை ஆடிக் காட்டுகிறார்.

ஏழாம் நூற்றாண்டுத் தமிழகத்தில் புழக்கத் திலிருந்த பல்வேறு இசைக்கருவிகளை ஆவணப்படுத்தும் அப்பரும் சம்பந்தரும் வீணைக்குச் சிறப்பிடம் தந்தனர். காப்பியக் காலம் தாண்டி பத்திமைக் காலத்துள் தமிழகம் நுழையும் காலக்கட்டத்தில், சங்ககாலந்தொட்டுச் சிறப்புடை நரம்புக் கருவியாக இருந்த யாழின் பயன்பாடு குறைந்து வீணை ஏற்றம் பெற்றதையே இலக்கியச் சான்றுகள் தெரிவிக்கின்றன.

தலையாலங்காட்டுத் தலைவனை நாவுக்கரசர், 'பண்டளவு நரம்போசைப் பயனை' (06.079.09) என்று பாடியது இதை உணர்த்தவேபோலும். பண்டை நாள்தொட்டுத் தமிழ்மண்ணில் ஒலித்த யாழிசையின் பயனென்று யாழைச் சிறப்பித்தது, வீணைநோக்கி மாற்றம்பெறும் புதிய வழக்கத்தை மெல்லிழையெனக் கூறுவதாகத் தெரிகிறது. பின்னும், யாழ் கோ யிலிசையின் பகுதியாகத் தொடர்ந்ததைச் சோழர்காலக் கல்வெட்டுத் தரவுகள்மூலம் தம் 'சோழர் கால ஆடற்கலை' நூலில் தெளிவுபடுத்துகிறார் டாக்டர் இரா. கலைக்கோவன்.

பதிக ஆசிரியர்கள் இறைவன் தாமே இசைப்பதாகக் கருவிகள் பலவற்றை இயம்பினாலும், அவர் கைளிலிடம்பெற்றுச் சிற்பங்களில் பெருமதிப்பு பெறுபவை தமருகமும் உடுக்கையும் வீணையுமே. கழுகுமலையில் மட்டுமே சிவபெருமான் மத்தளம் வாசிக்கிறார். தமருகம் இறைவன் திருக்கைகளில் ஏந்தும் பலவற்றுள் ஒன்றா யிருக்கிறது. வீணையோ, இறைவன் கைக்கொண்டிசைக்கும் முதன்மைக் கருவியாக மாறுவதைப் பதிகங்கள் உணர்த்த, சிற்பங்கள் உறுதி செய்கின்றன. இறைவன்மட்டுமே இசைத்ததா வீணையெனில், 'குடமுழவம் வீணை தாளங் குறுநடைய சிறுபூதம் முழக்க' (06.004.05) என்று சிறுபூதம் வீணை முழக்கியதையும் அப்பர் வரிகளால் அறியமுடிகிறது.

சிவபெருமான்பால் அளவற்ற அன்பையும் அவர் அருளின்பால் நெகிழ்வையும் ஒவ்வொரு பதிகத்திலும் உணர்த்திய அப்பர், வீணாதரராகத் தம்மிறைவனை உருகியுருகிப் போற்றுவது படிப்போரை மயக்கும் கன்னல்சாறு.

தகவல்களை ஒழுங்குமுறையில் கோத்துக் கோத்துத் தரும் அப்பருக்கேயுரிய பாங்கில்

வீணையேந்திய சிவனாரைப் பதிகவழியில் பார்ப்போம். திருவதிகை வீரட்டானத்தில் ஒரு கையில் மான்குட்டியும் ஒரு கையில் மழுவுமேந்திப் பாம்பணிந்த இறைவன், மற்றொரு கையில் வீணையைக் கொண்டார்; திருமறைக்காட்டில் அங்கையுளனலும் தம்கையில் வீணையும் வைத்தார் என்று சிவன் கையில் முதலில் வீணையைத் தந்தார் நாவுக்கரசர்.

கையில் வீணையேந்திய பெம்மான் எந்தக் கையில் வைத்தார் என்ற ஐயத்திற்கு விடைவைத்தார் திருப்புறம்பயத்தில். 'விரையேறு நீறணிந்தோ ராமைபூண்டு வெண்தோடு பெய்திடங்கை வீணை யேந்தி' என்று குறிப்பாக வீணையேந்தியதைச் சொன்னார். ஆக, இடக்கையிலேந்தி வலக்கையால் மீட்ட ஆயத்தமாகிவிட்டார் இறைவன். இங்கு ஒரே பாடலில், அரையேறு மேகலையாள் பாகன் அம்மையப்பர், ஆரிடத்தி லாட லமர்ந்த ஐயன் இடுகாட்டில் ஆடுபவர், புரையேறு தாமேறியவர் விடையேறுமிறைவன் என்ற மூன்று இறைத்தோற்றங்களையும் காணமுடிகிறது.

இறைவன் இடக்கையிலேந்திய வீணை எப்படிப்பட்டது? மாசில் வீணையென்று வேறொரு சூழலில் சொன்னவர் வீணைதரும் ஒலியை 'மழலை வீணையர்' மழலையின் இன்மொழியையொத்ததென்று சுவைபடக் கூறினார். யாழிசையினும் மழலைச் சொல்லை மெச்சிய வள்ளுவரைத் தொடர்ந்து வாகீசர், வீணையின் இன்னொலியை மழலையின் இன்மொழியோடு பொருத்திப் பாடினார். பழந்தமிழ் இலக்கியங்களைச் சுவைத்துணர்ந்த அவருடைய திறனை இது வெளிப்படுத்துகிறது.

மழலை வீணையை இடக்கையிலேந்தியாகிவிட்டது. வாசிப்பது எப்படி?

முறையான பயிற்சியே ஒருவரைச் சிறந்த கலைஞராக்குகிறது. சித்திரமும் கைப்பழக்கம் செந்தமிழும் நாப்பழக்கம் என்பது தமிழால் சைவம் வளர்த்த நாவுக்கரசர் அறியாததா? அதனால்தான், பண்கள் நிறைந்தொலிக்கும் வீணையைச் சிவபெருமான் பயின்றதை அடுத்தநிலையில் பார்க்கிறோம் 'பண்ணார்ந்த வீணை பயின்ற விரலானே,' என்று வீணைபயின்ற இறைவனின் விரல்களை அன்புடன் எண்ணியவர் (04.006.06), திருவதிகை வீரட்டத்தில், வீணையைப் பயின்றவன் கோயிலைக் காணாது கண்கள் எங்ஙனம் துயில்கொள்ளுமென்று கசிந்துருகினார்.

நரம்புக்கருவியில் பயிற்சிபெற்ற கட்டத்தில் சிவபெருமானை, இசையோடியைந்து இனிமைதரும் வகையில் வீணை மீட்டக்கூடிய கையவன் ('வீணையோ டிசைந்துமிகு பாடல் மிக்க கையவன்') எனப் புகழ்ந்தார். அவர் அடுத்தநிலையடைந்து, வீணையில் வல்லவரானது திருமறைக்காட்டில். 'கைகிளரும் வீணை வலவன் கண்டாய் (06.23.02)' என்று சிறுகுழந்தையின் துள்ளலோடும் பெற்றோரின் மகிழ்வோடும் கைத்தட்டி ஆரவாரித்தார் நம் அடியார்.

வீணையேந்திய சிவனாரைக் குறிக்கையிலும் அவருடைய மயக்கும் முறுவலைப் பேசத் தவறவில்லை அப்பர். 'முற்றந் தோறுந் தெறித்ததொரு வீணையராய்ச் செல்வார் தம்வாய்ச் சிறுமுறுவல் வந்தெனது சிந்தை வௌவ' என்று நோக்காதே மாயம் பேசிப்போன திருவலம்புரத்தானை எண்ணித் தவித்தார்.

நாவுக்கரசரின் பாடல்கள்வழி, வீணையைக் கையிலேந்தி கருவியிசைப்

பயின்று நன்கு பழகிஇசையோடியைந்து வாசிக்கும் தகுதிபெற்று அதில் வல்லவரானார் இறைவன். வல்லமை எய்தியபின், வீணையேந்திய திருவுருவைக் கொண்டே உலகோரின் தனிநாயகராகச் சிவனைக் காட்டினார் அப்பர்.

பெருங்கடல் மூடிப் பிரளயம் கொண்டு பிரமனும் கருங்கடல் வண்ணனும் இறக்க, அவர்கள் உடலையேந்தி கங்காளராக உலகை மீண்டும் தோன்றச் செய்ய நல்வீணை வாசிப்பாரென்று மும்மூர்த்திகளில் முதல்வனாகத் தம்மிறைவனை உயர்த்தி வைத்தார் (04.112.07).

மூவர்க்கும் முதலான மூர்த்தியாகச் சைவத்தின் தலைமகனை உயர்த்தியவர், 'தாமரையான் செங்கண்மால் தானே கண்டாய்' (06.23.03) என்று, மூவுருவும் ஒருருவே அவ்வுருவும் சிவவடிவேயென்று அருதியிட்டுச் சொன்னது ஏழாம் நூற்றாண்டுப் பத்திமை வரலாற்றில் சைவம் உச்சம்தொட்டதைப் பறைசாற்றும் ஆவணப் பாடல்.

அப்பரின் பதிகங்கள் காட்டிய வீணை யில்வல்ல சிவபெருமானுக்குச் சிற்பங்களில் சிறப்பிடம் தந்து காலங்கடந்து நிற்கச் செய்த முதற்பெருமை இரண்டாம் நரசிம்மரான இராஜசிம்மரையே சாரும். கடல்மாமல்லையில் தர்மராஜ ரதமென்று தவறான பெயரால் இன்றளவும் அழைக்கப்படும் 'அத்யந்தகாம பல்லவேசுவர கிருகத்தில்', அத்யந்தகாமன் என்ற பல்லவமன்னர் அமைத்ததுதான் தமிழகத்தின் முதல் வீணாதரர் சிற்பம். கடற்கரைக் கோயிலையும் காஞ்சி கயிலாயநாதர் கோயிலையும் கட்டிய இராஜசிம்மர்தான் மகாமல்லன் என்றும் விருதுப் பெயர்கொண்ட அத்யந்தகாமன்.

இராஜசிம்மரின் முதல் வீணாதரரும் அவருடைய மற்றொரு கலைப்பெட்டகமான காஞ்சி கயிலாசநாதர் கோயில் வீணைவல்லவரும் வெளிப்படுத்தும் அழகையும் மிடுக்கையும் கண்டால், நாயன்மார் நினைந்துருகிப் படம்பிடித்துக் காட்டிய நற்றமிழ் வடிவமே ஊக்கியாக இருந்திருக்கவேண்டுமென்று புரியும். கலைவல்ல பல்லவச்சிற்பிகள், அரசர்கள் படைக்கவிரும்பியதைச் செதுக்கிக் கல்லிலே கடவுளை உயிரூட்டிக் காட்டினர்.

பல்லவர்களைத் தொடர்ந்து, முற்சோழரையும் கவர்ந்தவர் வீணாதரர் என்பதையே கோயிற்சிற்பங்கள் மெய்ப்பிக்கின்றன. முதல் ஆதித்தரும், முதல் பராந்தகரும் பெருவிழைவுடன் வீணையேந்தியவரை நின்ற நிலையிலும் அமர்ந்த நிலையிலும் படைத்தனர்.



வீணாதரர்,
குடந்தை நாகேசுவரர்

"கும்பகோணம் நாகேசுவரர் கோயில் விமானத்தின் டணாதரக்கோலம் இதுவரை கிடைத்திருக்கும் வீணாதர சிவமூர்த்தங்களிலேயே மிகச் சிறந்ததும்,

அழகு பொலிந்ததுமாகும்,'' என்று தம் 'சோழர் கால ஆடற்கலை' நூலில் குறிப்பிடுகிறார் டாக்டர் இரா. கலைக்கோவன்.

அப்பர் தம் பாடல்களில் பதிவுசெய்த புராணச் செய்திகளனைத்தும் தமிழ்ச்சமூகத்தில் பல நூற்றாண்டுகளாகப் பரவி யிருந்தவையே. செவிவழி வழக்கிலிருந்த செய்திகள் பண்ணமைப் பாடல்களாக ஒலிக்க ஒலிக்க, மக்கள் ஈர்க்கப்படுவது இயல்பு. அப்பாடல்களின் ஈர்ப்பால் வடிவம்பெற்ற சிற்பங்கள் அழியாநிலையில் சமயம் வளர்க்கும் சின்னங்களாகவும் வரலாற்று ஆவணங்களாகவும் திகழ்வது கோயில்களில்தான். இன்று நாம் செல்லும் கோயில்களும் அதிலுறையும் இறைவடிவங்களும் கண்கவர் சிற்பங்களும் நிற்பது இந்த நீண்ட நெடிய வரலாற்றைத் தாங்கித்தான். அவற்றை வழிபாட்டுத் தலங்களாக வணங்குவதும் வரலாற்றுப் பெட்டகங்களாகப் போற்றுவதும் நம் கைகளில்.

நன்றி: டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையம், திருச்சிராப்பள்ளி.

## துணைநூல்கள்

1. இளங்கோவடிகள், சிலப்பதிகார மூலமும் அரும்பதவுரையும் அடியார்க்குநல்லாருரையும், பதிப்பு 1920

2. டாக்டர் இரா. கலைக்கோவன், சோழர் கால ஆடற்கலை

3. டாக்டர் இரா. கலைக்கோவன், பேரறிவாளர், வரலாறு.காம்

4. டாக்டர் இரா. கலைக்கோவன், மு. நளினி, மாமல்லபுரம் குடைவரைகள் ஒப்பாய்வு 1,2,3,4

5. பேராசிரியர் கு. சுந்தரமூர்த்தி, சங்க இலக்கியங்களில் சமய நோக்கு

## ஔவையார் நல்வழி பாடல்கள்

புண்ணியம்ஆம் பாவம்போம் போனநாள் செய்தஅவை
மண்ணில் பிறந்தார்க்கு வைத்தபொருள்எண்ணுங்கால்
ஈதொழிய வேறில்லை எச்சமயத்தோர்சொல்லுந்
தீதொழிய நன்மை செயல்.

**விளக்கம்:**

புண்ணியத்தால் இன்பமும், பாவத்தால் துன்பமும் உண்டாகின்றன. ஆகையினால் பாவங்களைச் செய்யாமல் புண்ணியங்களைச் செய்க. இதனையே எல்லா சமயங்களும் உயர்ந்த கருத்துகளாகச் சொல்லுகின்றன.

***********

சாதி யிரண்டொழிய வேறில்லை சாற்றுங்கால்
நீதி வழுவா நெறிமுறையின்மேதினியில்
இட்டார் பெரியோர் இடாதார் இழிகுலத்தோர்
பட்டாங்கில் உள்ள படி.

**விளக்கம்:**

கொடுத்தவர் உயர்குலத்தினர்; கொடாதவர் இழிகுலத்தினர்; இவ்வகையன்றி வேறு சாதியில்லை உயர்ந்த நூல்களில் உள்ள உண்மையான கருத்து இதுவேயாகும்.

***********

இடும்பைக்கு இடும்பை இயல் உடம்பு இதன்றே
இடும்பொய்யை மெய்யென் றிராதேஇடுங்கடுக
உண்டாயி னுண்டாகும் ஊழிற் பெருவலிநோய்
விண்டாரைக் கொண்டாடும் வீடு.

**விளக்கம்:**

நல்ல அறங்கள் செய்பவர்களுக்கு வீடுபேறு கிடைக்கும். அழிந்து போகின்ற உடம்மை மெய் என்று சொல்லாதே . நினையாதே (மெய் என்பதற்கு இருபொருள்கள் உண்டு ரூ மெய் என்றால் உண்மை என்றும் உடல் என்றும் பொருள் உண்டு ) நீரில் எழுத்து போல அழிவதால் உடம்பு பொய் எனப்பட்டது. உடம்பிற்கு மெய் என்று பெயர் வந்தது எதிர் மறை இலக்கணை. பயன் கருதாது செய்யும் அறத்தால் மனத்தூய்மையும், மெய்யுணர்வும், வீடுபேறும் உண்டாகும். ஊழ் என்ற பெருவலி நோயும் நீங்கும். ஆகவே அறம் செய்க.

ஐந்தொகை காட்டும் பகுதி–1

# தமிழர் சமயமும் கட்டடக்கலையும்

இரா. கலைக்கோவன்,
இயக்குநர்,
டாக்டர் மா. இராசமாணிக்கனார்
வரலாற்றாய்வு மையம்,
திருச்சிராப்பள்ளி

அகநானூறு, குறுந்தொகை, ஐங்குறுநூறு, நற்றிணை, கலித்தொகை ஆகிய ஐந்து தொகைநூல்களில் கிடைக்கும் தமிழர் சமயம், கட்டடக்கலை சார்ந்த தரவுகள் குறைந்த அளவினவே என்றாலும் வரலாற்று மீட்டுருவாக்கத்திற்குப் பெரிதும் துணையாகின்றன.

அகநானூற்றின் மூன்று பாடல்கள் அன்றைக்கிருந்த கோயிற் கட்டுமானங்களைச் சுட்டுகின்றன. அவை மூன்றுமே பல்வேறு காரணங்களினால் மக்கள் ஊரை நீங்கியதால் புரப்பாரின்றி அழிவுநிலைக்கு ஆளான சிதைந்த கோயில்கள். அவற்றுள் உருத்திரங்கண்ணனார் காட்டும் கோயில், யானை உரசியதால் உருவமிழந்த கோயில். அதன் சுவர்கள் செங்கற்களால் கட்டப்பட்டிருந்தன. மேலே உத்திரங்கள் இட்டுக் கைம்மரங்களால் கூரை சமைத்திருந்தனர். மாடங்களும் மரத்தால் ஆனவை. கோயில் வழிபாட்டில் இருந்தபோது அங்கு மணிப்புறாக்கள் குடியிருந்தன. கோயிலுள் வணக்கத்திற்கும் வழிபாட்டிற்கும் உரியவராய் ஓவியமாய் எழுதப்பட்ட கடவுள் எழுந்தருளியிருந்தார். கருவறைக்கு முன்னே நாளும் பலியிட ஊர் மெழுகும் திண்ணை அமைந்திருந்தது.

மக்கள் ஊர் பெயர்ந்த நிலையில் கோயிலுக்கு அருகில் இருந்த முருங்கை மரம் உண்ண வந்த யானையின் உரசலால், ஏற்கனவே தளர்ந்திருந்த செங்கல் நெடுஞ்சுவர் சிதைந்து, கற்கள் விலகி, கோயில் உத்திரம் பிடிப்பின்றிக் கீழே வீழ்ந்தது. மரத்தாலான மாடங்கள் குலைய, தங்க இடமில்லா நிலையில் அங்கிருந்த மணிப்புறாக்கள் வேறிடம் நாடிப் பறந்தன. மக்கள் வரத்தின்மையால் பலியிடல் நின்று, மெழுக்கல் அற்றுத் தூசி நிறைந்து, வண்ணம் மாறியிருந்த பலித்தளத்தில் குட்டியீன்ற நாயொன்று குழிபறித்துக் குடியிருந்தது. கறையான்களோ கூரையளவு புற்றெழுப்பிக் கைம்மரங்களைக் களித்துத் தின்றன. ஒரு கோயில் உருக்குலைந்த காட்சி காட்டும் இப்பாடலால் தமிழர் பொதியிலான சங்கக் கோயில் மரத்தால் கட்டப்பட்டிருந்தமையும் உள்ளுறை இறைவன் ஓவியக்காட்சியாய்

விளங்கியமையும் வெளிப்படுகின்றன.

குடவாயிற் கீரத்தனார் மக்கள் கவனிப்பிழந்த மற்றொரு கோயிலைக் காட்டுகிறார். உருத்திரங்கண்ணனார் காட்டிய கோயிலில் சுவரின் மீதுதான் யானை உரசியது. இங்கோ, சுரைக்கொடி படர்ந்த பொதியிலின் நிலைப்பொருளாய் நடப்பட்டிருந்த இறைக்கந்தின் மீதே ஆடொன்று உராய்ந்து மகிழ்ந்தது. தெய்வம் உறையும் தறியாய் வணங்கப்பட்ட கரியஅடி பொருந்திய அக்கந்து ஆட்டின் தாக்குதலால் நிலைகுலைந்து ஆடுவதா யிற்று. அப்பொதியிலின் முன்னிருந்த செங்கல்லால் ஆன பலித்தளம், பலியிட ஊரார் இல்லாமையான், மெழுக்கல் இன்றி நரை போல் வெளுத்திருந்தது. அதன் முன்னே பேரளவிலான ஆலமரமொன்று விழுதுகள் விட்டு மதில் போல் பொதியிலைச் சூழ்ந்திருந்தது.

மதுரை ஈழத்துப் பூதன் தேவனார் பாலையாக மாறிய முல்லை நிலத்தில் அழிந்து கொண்டிருந்த கோயிலொன்றைக் காட்டுகிறார். பொதியிலென அழைக்கப்பட்ட இக்கோயில் சுற்றிலும் சுவர்கள் கொண்டிருந்தது. மக்கள் வரத்து நின்றமையால் அச்சுவர்களை மூடிப் புற்றுகள் பரவின; புதர்கள் மண்டின. உள்ளே வலிய அடிப்பகுதியை உடைய கந்து நிலை பெற்றிருந்தது. அழிவின் தொடக்கக் காலமென்பதால் மாடங்கள் குலையவில்லை. அதனால், மணிப்புறாக்களும் அவற்றைத் துறக்கவில்லை.

இம்மூன்று அகப்பாடல்கள் கொண்டு சங்கக் கோயில்களான பொதியில்கள் செங்கல் கட்டுமானங்களாய், மரஉத்திரங்கள் இடப்பெற்று, மரத்தாலான மாடங்களும் கூரையும் கொண்டு விளங்கியமை அறியலாம். இவற்றின் முன்னிருந்த பலித்தளங்கள், வழிபாட்டிற்கு மக்கள் கொணரும் பூ, நெல் முதலான பலிப்பொருட்களை இறைத்திருமுன் இடுதற்காகச் செங்கற்களால் கட்டப்பட்டிருந்தன. இக்கோயில்களைச் சுற்றிலும் நிழலுக்கும் குளுமைக்குமாய் மரங்கள் வளர்க்கப்பட்டிருந்தன. சில பொதியில்களில் வளாகச் சுற்றை 'பல்படைப் புரிசை' என்றழைக்கப்பட்ட மதில் சூழ்ந்திருந்தது.

கந்து, மரத்தாலான தூண் போன்ற அமைப்பு கொண்டிருந்தது. அதைப் பொதியிலில் நட்டுத் தெய்வமாய் வணங்கினர். கந்துடைப் பொதியிலான கோயில் பாழ்பட்டபோது அக்கந்தில் உறைந்திருந்த தெய்வம் வெளியேறி விடுவதாய் நம்பப்பட்டது. 'எழுதணி கடவுள்' என்ற தொடர், கருவறைச் சுவரில் சுதைபூசி இறைவடிவத்தை வரைந்து வைத்திருந்த நிலையைச் சுட்டுகிறது. இன்றும்கூட இலங்கைக் கதிர்காமத்தில் கருவறைக் கடவுள் திரைச்சீலை ஓவியமாய் இருப்பது நினைக்கத்தகுந்தது.

நன்னிலைக் கோயில்கள் சிலவற்றையும் அகப்பாடல்கள் அடையாளம் காட்டுகின்றன. மதுரைக்கு மேற்கில் மயிற்கொடிகள் ஏற்றப்பட்டு இடைவிடாத விழாக்களால் பொலிந்திருந்த பரங்குன்றத்தை முருகனின் திருக்கோயில் அமைந்திருந்த இடமாக உறுதிப்படுத்துகிறது எருக்காட்டூர்த் தாயங்கண்ணனாரின் பாடல். வேலவனின் மற்றொரு கோயில் இருந்த தலமாகச் சீரலைவாய் சுட்டப்படுகிறது. விளக்குகளின் ஒளி வெள்ளத்தில் பொலிந்திருந்த அழகிய ஊராய் அதைக் கொண்டாடும் பரணர், அங்குள்ள முருகனைப் போர்வன்மை மிக்க தெய்வமெனப் பாராட்டுகிறார். செல்லூரில் அரிய வலி பொருந்திய கடவுளுக்கான கோயில் இருந்தது. வேள்வித்தீ அணையாத அவ்வூரில்

மழுவாள் நெடியோன் என்றழைக்கப்பட்ட பரசுராமரின் வேள்வித்தூணும் இருந்தது.

புகாருக்கு அருகில் இருந்த ஆலமுற்றத்தில் சிவன்கோயில் இருந்ததாகப் பரணர் கூறுகிறார். உலகெலாம் பரவிய, நன்மை பொருந்திய, நல்ல புகழையுடைய நான்கு வேதங்களாம் பழம்பெரும் மறைகளை அருளிய முக்கட் செல்வரே அக்கோயில் இறைவனாய்க் காட்டப்படுகிறார். சிவபெருமான் எழுந்தருளியிருந்த மற்றொரு கோயிலை நற்றிணைப் பாடல் ஒன்று மறைமுகமாய்ச் சுட்டுகிறது. அக்கோயில் இறைவனைக் கணங்கெழு கடவுள் என்று குறிக்கும் தோழி அங்குச் சென்று உயர் பலி தந்து வழிபாடு நிகழ்த்தி வரத் தலைவியை அழைக்கிறாள்.

புகாரில் இருந்த தெய்வத்தை நோக்கிக் கடுஞ்சூள் உரைக்கும் தலைவனைப் போந்தைப் பசலையாரின் அகநானூற்றுத் தோழி காட்டுகிறாள். புகாரில் பின்னாளில் ஏற்பட்ட கோயில் களின் பெருக்கத்துக்கு இப்பாடல் முன்னோடியாய் நிற்கிறது. இதே போன்றதொரு உறுதிப்பாட்டை தெறல் அரு கடவுள் முன்னர்த் தலைவியின் முன் கை பற்றி, உள்ளம் தேற்றித் தலைவன் தந்தான் என்று கூறும் பரணர், அதன் வழிக் கோயில் ஒன்று அங்கு இருந்தமையை உணர்த்துகிறார். வேளூரின் வாயிலில் உயர்ந்த பலிகளையே பெறும் அச்சம் தரும் தெய்வம் இருந்ததாகக் கூறும் இடையன் நெடுங்கீரனார், தன் மீது சுமத்தப்பட்ட பழியை மறுத்த தலைவன், தான் கூறுவது பொய்யாயின் அந்த வேளூர்த் தெய்வம் தன்னை வருத்தட்டும் என்று சூளுரைப்பதாகப் பேசுகிறார்.

முள்முருக்கம், கோங்கம், புனலி, பாதிரி, வெண்கடப்பம் ஆகிய பூக்கள் கொட்டிச் சிதறிக் கலந்து கிடக்கும் காட்டுநெறிக் காட்சி, கோயிலொன்றின் பலித்தளத்தையே பாலை பாடிய பெருங்கடுங்கோவிற்கு நினைவுபடுத்துகிறது. ‘அணங்குடை நகரின் மணந்த பூவின்’ என்ற பாடலடி, இறைக்கோயில்கள் நகர் என்ற சொல்லாலும் அழைக்கப்பட்டமையைத் தெரிவிக்கின்றன. ஐங்குறுநூற்றின் குறிஞ் சிப் பாடல் ஒன்று மலையில் அமைந்திருந்த கோயிலைக் கடவுள்குலம் என்று அழைக்கிறது. அங்கு வேங்கை மலரும் தேனும் படைத்துக் குறிஞ்சிப் பெண்கள் இறைவனை வழிபட்டனர். குலம் என்ற சொல் உறையும் இடத்தைக் குறிப்பதாகும். தேவகுலம், குருகுலம் என்ற வழக்காறுகள் கல்வெட்டுகளிலும் இலக்கியங்களிலும் இப்பொருளில் பயின்று வருதல் கண்கூடு.

முல்லையாகக் கருதப்படும் காட்டின் தெய்வமாய்த் திருமாலையே தொல்காப்பியர் சுட்டினாலும் அகப்பாடல்கள் இரண்டு, முருகனும் கொற்றவையும்கூடக் கானுறைத் தெய்வங்களாக வழிபடப்பட்டமையைத் தெளிவாக்குகின்றன. ‘காடு கெழு நெடுவேள்’ என்று முருகனும் ‘கான் அமர் செல்வி’ என்று கொற்றவையும் போற்றி வணங்கப்பட்டனர். புகழ்பெற்ற நுண்ணிய செய்யுட்கள் பலவற்றைப் பாடிய புலவர் பெருமான் ஒருவர் குதிரைகள் பல கொண்ட வரிசையைப் பெறுமாறு கானமர் செல்வி அருளியதாகக் குடவா யிற் கீரத்தனார் கூறுகிறார்.

தொகைப் பாடல்களில் பலபடப் பயின்று வரும் கடவுள், தெய்வம், அணங்கு என்னும் சொற்கள் இறைவனைப் பொது நிலையில் வைத்துக் காட்டுகின்றன. சில பாடல்கள் மாயோன், வாலியோன், கண்ணன், இராமன், நேமியஞ் செல்வன், முக்கட்செல்வர், முருகன், கானமர் செல்வி என்னும் தெய்வங்களைக் குறிப்பாய்ச் சுட்டிப் பேசுகின்றன. ‘மாயோன் அன்ன மால்வரை’, ‘வாலியோன் அன்ன வெள்ளருவி’ என்னும் தொடர்கள் இறை வடிவங்களின் தோற்ற அமைப்பு

கூறுகின்றன. திருமாலின் மார்பில் புரளும் வனமாலையையும் அவர் கையில் தங்கியிருக்கும் சக்கரத்தையும் ஆலம்பேரி சாத்தனார் குறிக்கிறார். சூரபன்மனையும் அவன் சுற்றத்தாரையும் தொலைத்த ஒளி பொருந்திய நெடிய வேலையுடைய சினம்மிகு முருகனை மதுரை மருதன் இளநாகனார், தண்பரங்குன்றத்து இறைவனாகக் காட்டுகிறார். அக்கோயிலை 'அந்துவன் பாடிய சந்து கெழு நெடுவரை' என்றும் போற்றுகிறார். நல்லந்துவனாரின் பரங்குன்றம் போற்றும் பாடல் தொகை நூல்களுள் ஒன்றான பரிபாடலில் இடம்பெற்றுள்ளது. காமக்கண்ணியார், வெறியாடல் ஒன்றைப் படம்பிடித்துக் காட்டும்போது தவறு செய்வோரைத் தேய்த் தொழித்த பெருங்கை இறைவனாய் முருகனைக் காட்டுகிறார். இப்பெருமானின் மார்பில் தவழ்ந்த ஆரத்தைப் பற்றி ஒரு பாடல் பேசுகின்றது.

முருகன் அன்ன சீற்றம், முருகனைப் போன்ற நல்ல போர் வெற்றி உறழ் முன்பு என்னும் உவமைகள் மக்கள் நெஞ்சில் முருகன் பெற்றிருந்த செல்வாக்கையும் அத்தெய்வத்தைச் சுற்றி அமைந்திருந்த தொன்மங்களையும் தெளிவாய் உணர்த்துகின்றன. 'முருகு புணர்ந்தியன்ற வள்ளி' என்ற நற்றிணை அடி இதற்கு மேலும் ஒரு சான்றாகிறது. கடம்பில் கொடி கட்டி, மாலைசூடி, முருகனின் கடம்பும் களிறும் பாடிப் பல்லிசைக் கருவிகள் முழங்கி அதற்கேற்ப ஆடலும் நிகழ்த்தி முருகனை வரவேற்றனர். அழைப்பேற்று வெறிக்களத்து வந்துற்ற தெய்வத்தை முருகு என உணர்ந்து, முகமன் கூறி, உருவச் செந்தினை நீரொடு தூவி, நெடுவேள் எனப் பரவி, கண்ணிகளாய்ப் பிணைத்த காந்தள் மலர்களை, வந்த இறைவனுக்கு வழங்குமாறு போலப் படைத்து மகிழ்ந்து வழிபட்டனர். மலர்களுள் காந்தளே 'கடவுட் காந்தள்' என்ற சிறப்பைப் பெறுகிறது. இது கடவுளுக்குப் பலியாய்த் தருவதற்கென்றே ஒதுக்கப்பட்ட காந்தள் செடிகளைக் குறிப்பதாக உரையாசிரியர் எழுதுகிறார். காந்தள் கண்ணி தந்து வழிபட்டால் கனவிலும் கண் முன்னும் முருகன் வருவாரென நம்பினர்.

ஐங்குறுநூற்றுப் பாடல்கள் வேலன் வெறியாடலைப் பற்றி விவரிக்குமிடத்து, 'கன்னம் தூக்கி முருகென மொழியும்' என்று கூறுகின்றன. இந்தக் கன்னம் மந்திரத் தகடு உள்ளே வைக்கப்பெற்ற தாயத்து என்கிறார் உரையாசிரியர். அகப்பாடல் ஒன்றும் 'பொன் செய் கன்னம் பொலிய' என்று சுட்டுவது இங்கு நினைக்கத்தகுந்தது. கார்த்திகை நாளில் நெடுங்கொடி போல் ஏற்றப்பட்ட விளக்கு வரிசைகளைச் சில பாடல்கள் காட்டுகின்றன. இவ்விளக்குகள் வீடுகளிலும் வீதிகளிலும் தொடராக ஏற்றப்பட்டன. இந்த விளக்கேற்றத்தின் உறுதியான பின்னணி பாடல்களில் பதிவாகவில்லை. 'அறுமீன் திங்களைச் சேரும் நாளில்' என்று விழா நாளை மட்டுமே குறிக்கும் பாடல்களில் விழாநாயகரின் பெயர் இல்லை. ஆனாலும், கார்த்திகை விழாவாய் இது அமைந்திருப்பதால் முருகு தொடர்புடையதாகக் கொள்ள வாய்ப்பிருக்கிறது.

தெய்வம் மறைந்து உறையும், வேண்டும்போது வெளிவந்து இயங்கும், அது போழ்து விரும்பும் உருவம் கொண்டுவரும் என்றெல்லாம் நம்பியவர்கள் அந்தத் தெய்வத்தை எங்கும் கண்டனர். பல பாடல்கள் சுனை, மரம், மலை, வீடு இவற்றில் கடவுள் உறைந்திருப்பதாகக் கூறுகின்றன. அவை பற்றிய செய்திகளைத் தொடர்ந்து காண்போம்.

(தொடரும்)

# வேல் வழிபாடு





**டாக்டர். வ.ஜெயபாலன்**
ஈப்போ, மலேசியா

## நகரத்தாரும் வேல் வழிபாடும்

நகரத்தார் பெருமக்கள் பழமையை மாறாமல் என்றும் போற்றி பின்பற்றும் வழக்கமுடையவர்கள். நம்முடைய ஆதித் தமிழர்களின் வழிபாட்டு மரபில் முன்னோர் வழிபாடும், வேல் வழிபாடும் முதன்மையானவை.

சங்ககாலத் தமிழனின் நடுகல் இட்டு முன்னோரை வழிபடும் முறைமையை இன்றைக்கும் நகரத்தார் பின்பற்றி வருகின்றனர். அதைப்போல, வேல் வழிபாட்டை அதன் தொன்மையும், பெருமையும் மாறாமல் இன்றளவும் போற்றி பின்பற்றி வருகின்றார்கள்.

பழனி பாதயாத்திரைக்கு முன்னே செல்வது வேல், அயல் நாடுகளில் கொண்டு விற்கச் சென்ற பொழுது அவர்களுக்கு வழிகாட்டிச் சென்றது செந்தூரான் வேல், சென்ற இடத்தில் அவர்கள் வழிபட்டதும் வேல்தான். வேலை வணங்குவது தம் வேலை என்று வாழ்ந்தவர்கள் நகரத்தார்கள்.

## வேல் வழிபாட்டின் தோற்றம்

வேல் வழிபாடு எப்படித் தோன்றியிருக்கக் கூடும்? அதன் பரிணாம வளர்ச்சி என்ன? என்பதை நாம் சிந்திக்க வேண்டும்.

வேல் வழிபாட்டுக்கு மூலம் ‘முருக’ வழிபாடு. ‘முருகு’ என்ற சொல்லுக்கு அழகு, இளமை, இறைத்தன்மை, நறுமணம் என்ற பொருள்களுண்டு. தமிழர்கள் தாம் வழிபடும் இயற்கையைத்தான் ‘முருகு’ என்றழைத்தார்கள். இதற்குக் காரணம் ஆதித்தமிழனின் வாழ்வாதாரமே இயற்கையை நம்பித்தான் இருந்தது. இயற்கையே அவனுக்கு உணவாகவும் உறைவிடமாகவும் இருந்தது.

அந்த இயற்கையே அவனுக்குத்

தோழனாகவும் சில நேரங்களில் காலனாகவும் இருந்தது. காற்று, மழை, சூரியன், மண், ஆகாயமென்ற பஞ் சபூதங்களை இயக்குவதும் இயற்கையே என்று நம்பினான் ஆதித்தமிழன். அதனால், அந்த இயற்கைக்கு நன்றி செலுத்தினான். இயற்கையை அச்சமாகவும் எண்ணினான்.

அந்த இயற்கையைப் போற்றினால் நல்ல வாழ்வு கிடைக்குமென்று நம்பினான். இந்த அச்சமும் நன்றியும் கலந்த எண்ணங்கள் பக்தியாகப் பரிமளித்தன. இந்தப் பக்தியைக் காட்ட வழிபாடுகள் செய்தான். இயற்கையை முருகென்று அழைத்துச் சிறப்புச் செய்தான்.

அந்த வேளையில் முருகுக்கு ஒரு குறியீடு கொடுக்க விரும்பினான். 'முருகு' தன்னைப் பாதுகாப்பதாக எண்ணிய அந்த ஆதித்தமிழன், அன்றாட வாழ்வில் தன்னைப் பாதுகாக்கும், தான் ஆயுதமாகப் பயன்படுத்தும் வேலையே முருகுக்குக் குறியீடாக எண்ணி வணங்கினான்.

அவன் கையிலிருந்த 'வேல்' முருகு என்ற முருகனைக் குறிக்கும் வடிவமாக மாறியது. ஆக, இன்றைக்கு நாம் வணங்கும் முருகனின் திருவடிவத்திற்கு முன்பே தோன்றியது 'வேல்'.

இதற்கு ஆதாரமாக விளங்குபவை ஆதிச்சநல்லூர் அகழ்வாராய்ச்சியில் கிடைத்த ஈமத்தாழிகளிலுள்ள எஃகினால் ஆன வேல். பழமையான கல்லும் உலோகமும் கலந்த காலமென்று ஆய்வாளர்களால் குறிப்பிடக்கூடிய ஆதிச்சநல்லூர் காலம் தமிழ் எழுத்து வடிவம் தோன்றுவதற்கு முன்பே தோன்றிய காலகட்டம்.

முருகனின் பழைமையான திருத்தலங்களில் ஒன்றான திருச்சீரலைவாய் என்றழைக்கப்படும் திருச்செந்தூர், இந்த ஆதிச்சநல்லூருக்கு அருகிலுள்ளது குறிப்பிடத்தக்கது.




ஆதிச்சநல்லூர் அகழ்வாராய்ச்சியின் மூலம், ஏழாயிரம் ஆண்டுகளுக்கு முந்தைய தமிழர்கள் வேல் வழிபாடு செய்தது நிரூபணமாகின்றது. மேலும், தமிழ் எழுத்துக்கள் தோன்றுவதற்கு முன்பே வேல் வழிபாடு இருந்து வந்ததும் புலனாகின்றது.

## சங்க இலக்கியத்தில் வேல் வழிபாடு

சங்க இலக்கியம் இந்த வேல் வழிபாடு எவ்வாறு நடைபெற்றது என்பதைப் பதிவு செய்கின்றது.

வேலைப் பூசிப்பவனை 'வேலன்' என்றார்கள். இந்த 'வேலன்' சில நேரங்களில், வேலைத் தூக்கிக் கொண்டு ஆடவும் செய்வான். இதற்குப் பெயர் 'வேலன் வெறியாடுதல்'. கபிலர் தன்னுடைய ஐங்குறுநூற்றுப் பாடலில் இந்த வேல் பூசையைக் குறிப்பிடுகின்றார்.

"வெண்மணல் பரப்பி, செந்நெல் தூவி,
பந்தல் இட்டு, பூ பல பெய்து
பசுந்தழை, காந்தள், பூக்குலை கட்டி"
"பொய்யா மரபின் ஊர்முது வேலன்
கலங்குமெய்ப் படுத்துக் கன்னம் தூக்கி
முருகென மொழியும் ஆயின்
கெழுதகை கொல்? இவள் அணங்கி யோற்கே"

என்பது கபிலரின் ஐங்குறுநூறில் வரும் பாடல். தொல்காப்பியரும் இந்த வேலன் வெறியாடுதலைக் குறிப்பிடுகின்றார்.

"வெறிஅறி சிறப்பின் வெவ்வாய் வேலன்
வெறியாட்டு அயர்ந்த காந்தளும்"

என்று காந்தள் மலர் சூடிய வேலன், வேலைத்தூக்கி ஆடும் அழகைப் பதிவு செய்கின்றார்.

ஒரு சமண முனிவரான இளங்கோவடிகள் வேலுக்கென்று தனி விருத்தமே பாடுகின்றார்.

"சீர்கெழு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும்
ஏரகமும் நீங்கா இறைவன்கை வேலன்றே!"

என்று தொடங்கி,

"சூர் மா தடிந்த சுடர் இலைய வெள்வேலே!
குருகு பெர்க் குன்றம் கொன்ற நெடுவேலே!
இணை இன்றித் தான் உடையான் ஏந்திய வேல் அன்றே!
திரு முலைப்பால் உண்டான் திருக்கை வேல் அன்றே!"

என்று வேலின் சிறப்பைச் சிலப்பதிகாரத்தில் பட்டியலிடுகின்றார்.

இப்படி 'வேல்' என்ற குறியீடு, முருக வழிபாட்டின், முதல் உருவ வழிபாடாக



அமைந்ததைச் சங்க இலக்கியம் பதிவு செய்கின்றது. முருக வழிபாட்டின் முதல் வடிவம் 'வேல்' என்பதை விட தமிழர்களின் கடவுள் வழிபாட்டுக்கே மூலவடிவமாகத் திகழ்வது வேல் வழிபாடாகும்.

பிற்காலத்தில், தமிழர் வழிபாடுகளில் மெய்யியல் கோட்பாடுகள் வலுப்பெறத் தொடங்கியதும் வேலுக்கு ஆட்டு இரத்தம் கலந்த அரிசியைப் படைப்பது முதற்கொண்ட உயிர்ப்பலி சம்பந்தப்பட்ட வழிபாட்டு முறைகள் தவிர்க்கப்பட்டன. 'கொல்லாமை' என்பது வழிபாட்டின் பரிணாம வளர்ச்சியாக மாறியது. 'வேல்' ஞானத்தின் குறியீடாக நிலை பெற்றது.

முருக வழிபாட்டில் வேல் என்பது முருகனின் ஆயுதமல்ல. அதுவே, முருகனின் முதல்வடிவம் என்ற சிறப்பைப் பெற்றது. இதனால்தான், வேலை 'உடம்பிடித் தெய்வம்' என்றழைக்கின்றனர். அதாவது, முருகன் உடன் பிடித்திருக்கும் தெய்வமாகவே, வேல் விளங்குகிறது.

வேல் வழிபாட்டில் தொடங்கிய முருக வழிபாடு, அதற்கடுத்த கட்டமாக முருகப்பெருமானின் திருவுருவத்தை மையப்படுத்திய வழிபாடாக வளர்ந்தது. ஆனால், முருகனின் திருவுருவ வழிபாட்டு முறைகள், நீட்சி பெற்ற அதே வேளையில்

வேல் வழிபாடு, சிவலிங்க வழிபாட்டைப் போல முருகனின் அருவுருவ வழிபாடாக நிலைபெற்றது.

## முருகனுக்கு வேல் எப்படி வந்தது ? யார் தந்தது ?



வரலாற்றின்படி குறிஞ்சி நில தமிழ் மக்கள் முருகு என்பதற்கு அடையாளமாக முதலில் வேலை வழிபட்ட சான்றுகள் இருந்தாலும், புராணப்படி இந்த வேல் முருகனுக்கு எப்படி வந்தது ? யார் தந்தது? என்பதற்கான விடை கந்தபுராணத்தில் உள்ளது.

கந்தபுராணம் உற்பத்தி காண்டத்தில், சூரபத்மனை வெல்வதற்காக முருகப்பெருமான் கயிலாயத்தில் சிவபெருமானிடம் விடைபெறும் படலத்தில், இந்த வேல் வாங்கிய செய்தி குறிப்பிடப்படுகின்றது.

திருக்கயிலாயத்தில், போர்க்கோலம் கொண்ட சிவகுமாரனாகிய முருகன் சிவபெருமானைச் சந்திக்கின்றார். சிவன் முருகனுக்குத் தன்னுடைய பதினொரு உருத்திரர்களை, முறையே தோமரம், கொடி, வாள், குலிசம், அம்பு, அங்குசம் ,மணி, தாமரை, தண்டம், வில் ,மழு என்ற பதினொரு ஆயுதங்களாகக் கொடுத்தார் என்ற செய்தியைச் சொல்கின்றார் கச்சியப்பர். அடுத்ததாக ஐம்பூதங்களையும், எவரையும் வெல்லும் படைக்கல நாயகமாகிய வேலை கொடுத்தார் என்று பதிவு செய்கின்றார்.

“ஆயதன் பின்னர் ஏவில் மூதண்டத்
தைம்பெரும் பூதமும் அடுவது,
ஏயபல் லுயிரும் ஒருதலை முடிப்பது
ஏவர்மேல் விடுக்கினும் அவர்தம்
மாயிரும் திறலும் வரங்களும் சிந்தி
மன்னுயி ருண்பது எப்படைக்கும்,
நாயக மாவது ஒருதனிச் சுடர்வேல்
நல்கியே மதலைகைக் கொடுத்தான்”
(விடை. பெறு. 38)

“ஏவிய உடன் ஐம்பூதங்களை அழிப்பதும், பல உயிர்களை ஒரே நேரத்தில் முடிப்பதும், யார் மீது விடுத்தாலும் அவர்கள் உயிரை மாய்ப்பதுமாகிய, ஒளி பொருந்திய வேலை எடுத்து குழந்தை வேலனின் கையில் சிவபெருமான் கொடுத்தான்” என்றுதான் கச்சியப்பர் குறிப்பிடுகின்றார். ஆனால், இன்றைக்கு முருகனுக்கு வேல் தந்தது சக்தியாகிய பார்வதிதேவி என்று சிலர் சொல்கின்றார்கள்.

கந்தபுராணப்படி, இது முரணான கருத்து என்றாலும், ஐதீகப்படியும், மரபுப்படியும் சிவன் கொடுத்த வேல் என்றாலும், அந்த வேலுக்கு சக்தியைக் கொடுத்தது உமையம்மை என்ற கூற்றை அருணகிரிநாதர் உட்பட பல சான்றோர்கள் ஒப்புக் கொள்கின்றார்கள். இது எப்படி என்றால், திருஞானசம்பந்தருக்கு சிவபெருமான் காலத்தை கொடுத்தாலும் தாளத்தை கொடுத்தாலும், அம்பிகைதானே ஓசையைக் கொடுத்தாள் என்பதைப்போல.



## அருணகிரிநாதர் அருளிய வேல்வகுப்பு

“எழும்போதும் வேலும் மயிலும்
என்பேன் எழுந்தே மகிழ்ந்து
தொழும்போதும் வேலும் மயிலும்
என்பேன் தொழுதே உருகி
அழும்போதும் வேலும் மயிலும்
என்பேன் அடியேன் உடலம்
விழும்போதும் வேலும் மயிலும்
என்பேன் செந்தில் வேலவனே’’

என்பது ஸ்ரீமத் பாம்பன் குமரகுரு சுவாமிகளின் திருவாக்கு.

வேலும் மயிலும் முருகனின் அடையாளங்கள். வேல் தான் முருகன் முருகன் தான் வேல் என்பதை முருக பக்தர்கள் உணர்வார்கள்.

முருகன் இன்றி வேல் இருக்கலாம். ஆனால், வேல் இன்றி முருகனை தனியாக பார்க்க முடியாது. அந்த அளவுக்கு முருக வழிபாட்டில் வேல் சிறப்புப் பெறுகின்றது.

திருமுருகாற்றுப்படையில் நக்கீரர் வேலின் பெருமையை இரண்டு வரிகளில் கூறியிருந்தாலும், கந்தபுராணத்தில், வேலுக்குச் சிறப்பான இடத்தைத்கச்சியப்ப சிவாச்சாரியார் தந்திருந்தாலும், வேல் வழிபாட்டிற்கு ஒரு தனி இடத்தை கொடுத்தவர் அருணகிரிநாதப் பெருமான் என்றே சொல்லலாம்.

வேல் வகுப்பு என்றும், வேல் விருத்தம் என்றும் வேல் வழிபாட்டுக்காகவே பல தனிப்பாடல்களை இயற்றி, வேல் வழிபாட்டில் மறுமலர்ச்சியை ஏற்படுத்தினார்.அருணகிரிநாதரின் வேல் வகுப்பும், வேல் வாங்கு வகுப்பும், வேல் விருத்தமும் மகத்துவம் பெற்றவை.

அருணகிரிநாதர் அருளிய 18 திருவகுப்புகளில் மூன்றைச் சிறப்பாக குறிப்பிட்டுச் சொல்வது வழக்கம். முதலாவது ஞானத்தை தரவல்ல மணி போன்ற சீர்பாத வகுப்பு.

இரண்டாவது மந்திரம் போன்ற தேவேந்திர சங்க வகுப்பு. இது பூதம் பிசாசு போன்ற தீய சக்திகளை நீக்க வல்லது.

மூன்றாவது மருந்தைப் போன்ற வேல் வகுப்பு. இதை ஔஷதம் என்று சொல்வார்கள். இந்த வேல்வகுப்பு உயிருக்கும், உடலுக்கும் துணையாக இருப்பது. வேல் வகுப்பின் ஒலி மந்திர சக்தி வாய்ந்தது. இதனால் இதைச் சொல்லும் பொழுது கொடிய சக்திகள் நம்மை தீண்டாது. கொடிய நோய்களின் தாக்குதல்கள் நம்மை அண்டா வண்ணம் வேல் வகுப்பு நமக்கு கவசமாக இருந்து காக்கும் என்பது நம்பிக்கை.

திருப்புகழுக்கு உரை எழுதிய தணிகைமணி வ.சு. செங்கல்வராயப்பிள்ளை அவர்கள் இந்த மூன்று வகுப்புகளையும் மணி மந்திர ஔஷத வகுப்பு என்று சொல்வார்கள் சொல்வார்கள்.

வேல் வகுப்பில் மொத்தம் பதினாறு கண்ணிகள் உண்டு. ஒவ்வொரு கண்ணியின் நிறைவிலும் திருத்தணியில் உதித்தருளும் ஒருத்தன் மலை விருத்தன், எனது உளத்தில் உறை கருத்தன் மயில் நடத்துகுகன் வேலே... என்பதை சேர்த்துச் சொல்வது வழக்கம்.

வேல் வகுப்பின் பதினாறு அடிகளை மேலும் கீழுமாகவும், முன்னும் பின்னுமாகவும் ஏறி இறங்கி வருவது போல் மாறி மாறி வர அமைத்து, அதனை நான்கு மடங்காக (16×4 = 64) அறுபத்து நான்கு அடிகளாக அமைய வைத்து, அந்த பாராயண முறையை ‘வேல்மாறல்’ என்று தொகுத்து அளித்தவர் வள்ளிமலை ஸ்ரீசச்சிதானந்த சுவாமிகள் ஆவார். வேல்மாறல் பாராயணம் மன ஒருமைப்பாட்டை உண்டாக்க வல்லது. வள்ளிமலை சுவாமிகளின் முறைப்படி இந்த வேல் மாறலை பாராயணம் செய்யும்பொழுது அதிலிருந்து உண்டாகும் அதிர்வு அலைகள் பல அதிசயங்களை செய்ய வல்லன.

## நிறைவுரை

நகரத்தார் தொன்று தொட்டு போற்றும் வேல் வழிபாடு தொன்மையும், பெருமையும் மிக்கது. இறைவன் அறிவு மயமானவன். வேல் என்பது ஆயுதம் அல்ல. அது அறிவின் குறியீடு.

அஞ்ஞானம் என்பது நமக்கு பகை. அந்த அஞ்ஞான அசுரரை அழிப்பது ஞான ஒளியாகிய வேல்.

ஒரு தந்தை எப்படி என்னுடைய தன்னுடைய குழந்தைக்கு அறிவு தரும் குருவை காட்டுகின்றாரோ, அதைப்போல எம்பெருமான் முருகனுக்கு ஞான வேலைக்கொடுத்தவர் சிவபெருமான். அதற்கு சக்தி கொடுத்து, அதை சக்திவேலாக மாற்றியது அம்பிகை.

முருகப்பெருமான் அந்த வேலால் சூரபதுமனை மாய்க்கவில்லை. ஆனால், அவன் ஆணவத்தை அழித்து, ஒளியைக் கண்டதும் கூவும் சேவலாகவும், ஓங்கார ரூபம் கொண்ட மயிலாகவும் மாற்றினார்.

அதுபோல, வேல் வழிபாட்டின் மூலம் ஞான நிலையை அடைந்து, அறிவை அறிவது அறிவு என்ற பேருண்மையை முருக பக்தர்கள் உணரலாம்.

வழியில் பயமில்லை; வேலும்
மயிலும் வழித்துணையாய்
சுழியில் தொடங்கி சுடலையில்
தோயும் சக வாழ்வில்

மொழியில் அடங்கா மயக்கும்; பல்
ஆசை முயற்சி முனைக்
குழியில் வீழ்த்தலாம்; கும்பிடு
வேலை; குறை தீருமே

கவிஞர் வாலி,
ஆறுமுக அந்தாதி
(86 ஆவது பாடல்)

## வேலும் மயிலும் துணை



## கோவிலூர் ஆதீன வெளியீடுகள்
## கோவிலூர் புதையல்கள் – 11

# காசிகாநந்த விஜயம்

– நூல் அறிமுகம்



– கு. அன்பு மெய்யப்பன்,
உதவிப் பேராசிரியர்,
இராமசாமி தமிழ்க் கல்லூரி,
காரைக்குடி – 3.

கோவிலூர் சீட பரம்பரையில் மற்றுமொரு மாணிக்கக்கல் திருப்பூவணம் காசிகாநந்த ஞானாசார்ய சுவாமிகள். கோவிலூர் பற்றிய வரலாற்றை ஆராயும்போது பல அரிய தகவல்களைத் தந்தவை இவரது நூல்கள். தன் வாழ்நாள் முழுதும் ஆன்மீகத்தில் ஈடுபட்டதோடு, தன் அனுபவங்களை, தன் எண்ணங்களை நூல்களாக வடித்துப் பெருந்தொண்டாற்றியவர்.

குருவின் மீதும் கோவிலூர் மீதும் அளப்பறிய பக்தி கொண்டவர். சீர்வளர் சீர் மெய்யப்ப சுவாமிகளைச் சந்தித்துப் பேசிக்கொண்டிருந்தபோது, காசிகாநந்த சுவாமிகளைப் பற்றிய ஒரு செய்தியைப் பகிர்ந்து கொண்டார்கள். சுவாமிகள் நூல்களைப் பதிப்பித்து அவற்றைத் தலைச் சுமையாகக் கட்டி எடுத்துக் கொண்டு பல ஊர்களுக்கும் சென்று அவற்றைக் கொடுப்பார்களாம்.. அதன் மூலம் ஆன்மீகக் கருத்துகளை மக்களிடம் கொண்டு சேர்ப்பார்களாம்.

அத்தகைய சுவாமிகளின் வரலாற்றினைப் பதிவு செய்யும் விதமாக காசிகாநந்த விஜயம் என்னும் இந்நூல் படைக்கப்பட்டுள்ளது. இந்நூல் சென்னையைச் சார்ந்த தமிழ்ப் புலவர், ம. இராஜகோபால் பிள்ளை அவர்களால் 1915இல் உரைநடையாக எழுதப்பட்டுள்ளது. 1925இல் திருப்பூவணம் வேதாந்த மடத்தின் மூலம் மதுரை மீனலோசனி பிரசில் பதிப்பிக்கப்பட்டுள்ளது. காசிகாநந்த ஞானசாரியார் பிறப்பு முதல் கோவிலூர் வந்தடைந்தது வரை இந்நூல் எடுத்தியம்புகிறது. நாற்பத்தெட்டு பக்கங்களைக் கொண்டுள்ளது.

இந்நூலாசிரியரைப் பற்றிய தகவல்களை அறிய முடியவில்லை. தமிழ் மொழியில் ஆழ்ந்த புலமை நிரம்பியவர் என்பதை இவரது உரைநடை காட்டுகிறது. நூலின் தொடக்கமாக, ஒன்பது துதிப் பாடல்கள் காணப்படுகின்றன.

சொரூப ஸ்துதி, கொற்றவாளீசர் துதி, திருநெல்லை நாயகி துதி. வந்நி விநாயகர் துதி, ஸ்ரீ சுப்பிரமணியர் துதி, ஸ்ரீ முத்தி ராமலிங்க ஞானதேசிகர் துதி, ஸ்ரீ அருணாசல ஞானதேசிகர் துதி, ஸ்ரீ சிதம்பர ஞானதேசிகர் துதி, ஸ்ரீ வீரசேகர ஞானதேசிகர் துதி என்பன அவை.

### தேவிகோட்டையின் சிறப்பு

காசிகாநந்தர் பிறந்த தேவகோட்டையின் சிறப்பினை தொடக்கத்தில் கூறுகிறார் ஆசிரியர். தேவகோட்டை முற்காலத்தில் தேவி கோட்டை என அழைக்கப்பட்டுள்ளது. தேவிகோட்டையின் எல்லையைக் குறிப்பிடும் போது, “திருமெய்யம் (திருமயம்) வடபாலும், திருவாடானை தென்பாலும், திருப்புத்தூர் மேற்பாலும், ஆளுடையார் கோயில் (ஆவுடையார் கோயில்) கீழ்ப்பாலும் கொண்டு நடுநாயகமாக நின்று உலகை வாழ்விக்கும் ஊர்” என்று அறிமுகப்படுத்துகிறார். 1915 வாக்கில் நகரத்தார் ஊர்களில் அளாகாபுரி மிகுந்த செல்வாக்கினைப் பெற்ற ஊராக இருந்திருக்க வேண்டும். தேவிகோட்டையைப் அறிமுகம் செய்யும் போது, “ அளகாபுரியை எல்லா வழக்கினும் ஒருவாறு தனக்கு ஈடாகப் பெற்றுயர்ந்துள்ள தேவிகோட்டை என்னும் புண்ணிய ஷேத்திரம்” என்று குறிப்பிடுகிறார்.

நிறைய பழமொழிகளை அங்கங்கே பயன்படுத்துகிறார் ஆசிரியர். தேவிகோட்டையின் செல்வச் செழிப்பினைச் சுட்டும் போது, “குபேரன் பட்டினத்தும் விறகுத் தலையணையுண்டு. என்னும் பழமொழி இழிமொழியாகும்படி வறியவரைத் தேவிகோட்டையில் காணக்கூட முடியவில்லை” என்று கூறுவது அருமை.

### முன்னோர் மற்றும் அவரது தாய் தந்தையர் திருமணம்

தேவிகோட்டையில் தோன்றி மகிழ்வோடு வாழ்ந்த ஒரு தன வைசிகர் பெரியண்ணன் செட்டியார். ஒன்பது நகரக் கோயில்களுள் ஒன்றான மாத்தூரில் மணலூர் பிரிவைச் சார்ந்தவர். சிறுவயது முதலே ஆன்மீக ஈடுபாடு மிகுந்தவராகவே வாழ்ந்து வந்துள்ளார். தான் பெற்ற பொருளனைத்தையும் சிவபுண்ணியத்திற்கே பயன்படுத்த வேண்டும் என்று முடிவெடுத்து, அவ்வாறே செயல்பட்டு வந்துள்ளார். இந்நிலையில் “ மகப் பெறா மாநிடர்கள் வானவர்தம் மூர்க்குப் புகப் பெறார்” என்ற வரி அவர் மனதில் ஓடிக்கொண்டே இருக்கின்றது. அதாவது, மக்களைப் பெறாத மனிதர்கள் வானவர்களின் ஊருக்குள் புகமுடியாது என்பதே அது.

அதன்பொருட்டு, சிவபெருமானது அருளால், சுவிகாரமாகக் குழந்தை ஒன்றைத் தத்தெடுக்கிறார். அதற்கு இராமசாமி எனப் பெயரிட்டார். உரிய காலத்தில் உமையாம்பிகை என்னும் பெண்ணைத் திருமணம் செய்விக்கிறார். இராமசாமியும் சிறு வயது முதலே இறைநாட்டம் கொண்டவராக விளங்கி வந்துள்ளார்.

துறவிகளல் முதல் பலருக்கும்

அன்னமிட வேண்டும் என்ற எண்ணம் இராமசாமி செட்டியாருக்கு அடிக்கடி நினைவில் வந்துள்ளது. அதனைத் தன் மனைவியிடம் கூற முனைந்தபோது, அப்போது, அவர் மனைவி, “ கொண்டான் குறிப்பறிவாள் பெண்டாட்டி” என்றபடி தனது கணவரின் கருத்தைக் குறிப்பாலறிந்து, அதற்குத் தன் ஒப்புதலை அளித்துள்ளார். கணவனுக்கு ஏற்ற மனைவியாக உமையாம்பிகை வாழ்ந்து வந்த நிலையில், துறவிகள் முதல் பலருக்கும் உணவு கொடுத்து தாமும் உண்டு வந்துள்ளனர் அத் தம்பதிகள்.

உமையாம்பிகையைப் பற்றி ஆசிரியர் கூறிவரும் போது, சிறந்த இல்லாளின் செயல்களாக் கூறப்படும் ஒரு பாடலைக் குறிப்பிடுகிறார். உமையாம்பிகையும் அப்படிப்பட்ட சிறந்த பெண்மணி என்பதைச் சுட்டுகிறார். அப்பாடல் கீழ்வருமாறு

“காரியம் பார்ப்பாள் கணக்கு எழுதுவாள்
காய்கறி ஆக்கவும் கெட்டி – அவள்
கைப்பட்டால் வேம்பும் கரும்பல்லவோ ருசி
கண்டுநீர் மண்டுவீர் சட்டி – மற்றும்
ஊரிலே மாமியார் நாத்திமார் எல்லாம்
உகந்திடுங் கற்கண்டு கட்டி – தினம்
ஓயா விருந்து வந்தாலும் சலியாமல்

உண்ணச் சொல்வாள் அன்னம் கொட்டி – அந்த
வண்ணக் குயிலை நீர் கிட்டி – இரு
கண்ணில் கண்டால் வரும் திட்டி – துரைப்
பெண்ணைக் கொள்ள என்ன அட்டி”

மிகச் சிறந்தஇல்லாளாக வாழ்ந்து வந்துள்ளார் உமையாம்பிகை.

## குழந்தையில்லாக் குறை தீர்ந்தது

அந்நாளில் உடல் முழுதும் திருநீறணிந்த சிவனடியார் ஒருவர் அவர்கள் இல்லத்திற்கு வந்தபோது, கணவன் மனைவி இருவரும் அவரை வணங்கி, விருந்தளித்தனர். மனமும் வயிறும் நிறைய உண்ட அவ்வடியார், அவர்களை வாழ்த்தியபின், உங்களுக்கு ஒரே ஒரு குறை உள்ளது. நன்மக்கட்பேறு. அதனைப் பெற இறைவியை வேண்டுங்கள் என்று கூறிச் செல்கிறார்.

இறை வழிபாட்டினால், உமையாம்பிகை கருவுருகிறார். விய வருடம் (கி.பி.1886) சித்திரை மாதம் 9ஆம் தேதி மகனாக சுவாமிகள் அவதரித்தார்.

## பெயர் சூட்டுதலும் குழந்தைப் பருவமும்

சுவாமிகளுக்கு துர்க்கா தேவியின் பெயராகிய காளியப்பன் என்பதை வீட்டின் பெயராக வைத்தனர். காசி என்னும் திருநாமத்தைச் சூட்டினர். அவருக்கு ஐந்து வயதாகும் போது திண்ணைப் பள்ளியில் சேர்த்து விடுகின்றனர். 10 வயதுக்குள் அவர் அனைத்தையும் கற்றுத் தேருகிறார்.

## தொழிலில் ஈடுபடுதல்

நகரத்தார்களின் வழக்கப்படி, குலத் தொழில் பழகுவதற்குப் பணிக்கப்பட்டார் சுவாமிகள். இவருக்கு அதில் ஈடுபாடில்லையாயினும், குல தருமத்தை எண்ணி சில நாளேனும் அதில் ஈடுபடுவோம் எனக் கருதி குலத்தொழிலில் ஈடுபடலானார். திறம் பட தொழில் செய்தார். இந்நிலையில் 10 வருடமான நிலையில், பர்மாவிற்குச் சென்று தொழில் செய்ய ஆசைப்பட்டு

அங்கும் செல்கிறார். பெரும் பொருள் ஈட்டுகிறார்.

### குருவை அடைதல்

பொருளைத் தேடும் வேட்கை குறையத் தொடங்கிய பின் இறைச் சிந்தனை அதிகமானது. அதன் பொருட்டுத் தன் ஊரான தேவி கோட்டையை வந்தடைந்தார் சுவாமிகள். தாய் மொழியாம் தமிழைக் கற்றதோடு, பர்மா, இந்துஸ்தானி போன்ற மொழிகளையும் கற்கிறார். இவற்றில் தமிழே இவற்றில் சிறந்தது என்பதை உணர்ந்து அதன் மீது வேட்கை கொண்டு பல நூல்களைப் படிக்கத் தொடங்குகிறார். இறைச் செய்திகளை படிக்கப்படிக்க இன்பம் தோன்றுகிறது. இறைவனை முழுதும் அறிய ஒரு குருவினை கோவிலூரில் கண்டடைவேன்! என்று மனதில் உறுதி கொள்கிறார். கோவிலூரை அடைகிறார்.

அப்போது பட்டத்திலிருந்த, வீரசேகர ஞானதேசிகரைச் சந்தித்து, தாள் பணிகிறார். இவரைக் கண்டவுடன்,"இவன் பக்குவசாலி. இவனை நாம் ஆதரித்தல் வேண்டும்" என்று கருதிய வீரசேகர ஞான தேசிகர் ஆசியளித்து, வேதாந்தங்களைப் போதித்து வரலானார்.

### காசி யாத்திரை

மூன்று மாதங்கள் கடந்திருந்த நிலையில், தேனிபட்டி அண்ணாமலை சுவாமிகள் (ஆறாம் பட்டம்) காசிக்குச் செல்லக் கருதுகிறார். ஆனால், வட நாட்டில் அம் மொழி தெரியாதாகையால், இந்துஸ்தானி அறிந்த காசிகாநந்த சுவாமிகளை அழைத்துச் செல்ல முடிவெடுக்கிறார். வீரசேகரரிடம் அனுமதி பெற்று அவரையும் அழைத்துச் செல்கிறார். அவர் அங்கு சில காலம் தங்கியிருந்து வருவதாக தேனிபட்டி அண்ணாமலை சுவாமிகள் கூறுகிறார். காசிகாநந்தர் மட்டும் கோவிலூர் திரும்புகிறார்.

### துறவு எண்ணம்

பல தேசங்களுக்கு ஆன்மிக யாத்திரை சென்று வந்த பின், இல்லறத்தில் நாட்டமில்லாது, வீரசேகரர் சொல்லும் குற்றேவல்களைச் செய்து வந்துள்ளார். அதனைக் கண்ட வீரசேகரர் அவருக்கு சந்நியாசம் அளிக்க எண்ணுகிறார்.

### மீண்டும் காசி யாத்திரை

துறவறத்திற்கு உரிய ஒழுக்க நெறிகளைத் தவறாது பின்பற்றி வந்த, காசிகாநந்த ஞானாசாரியாருக்கு மீண்டும் காசி செல்ல வேண்டும் என்ற எண்ணம் வருகிறது. குருவிடம் அனுமதி கேட்கிறார். அவரும் காசிக்குச் செல்வதோடு வடமொழி நூல்களையும் முழுவதுமாகக் கற்று வரப் பணிக்கிறார். அவ்வாறே காசி சென்றவர் 7 வடமொழி நூல்களை முழுவதுமாகக் கற்றுத் தேருகிறார்.

இதனோடு இந்நூல் முடிவடைகிறது. கோவிலூரின் கிளை மடமான திருப்பூவண மடம் இந்நூல் எழுதப்பட்டு 5 ஆண்டுகளுக்குப் பின்னரே சுவாமிகளால் தொடங்கப்படுகிறது. ஆகவே அவை பற்றிய செய்திகள் இந்நூலில் இடம் பெறவில்லை. இவர் 1958இல் மறைந்துள்ளார்.

காசிகாநந்த ஞானாசாரியாரின் கோவிலூர் சார்ந்த பதிப்பு நூல்கள் பற்றி அடுத்தடுத்த மாதங்களில் காண்போம்.

# காரைக்காலம்மையாரின் அற்புதத் திருவந்தாதி பாடல் நலம்



- வாகீச கலாநிதி
கி.வா. ஜகந்நாதன்

## பெருஞ் சேமம்

மனிதன் மனத்தின் வசப்பட்டு வாழ்க்கையில் அவலத்தை அடைகிறான். மனம் பேய் போன்றது. பேய் சும்மா இராது. அதற்கு எதையாவது பலி கொடுத்துக் கொண்டே இருக்க வேண்டும், பிறருக்குத் துன்பம் தருவதே பேய்க்கு இயல்பு. தன்னுடைய காட்சியாலே பிறருக்கு அச்சத்தை உண்டாக்கி, தன் தொடர்பாலே துன்பத்தை விளைத்து அதனால் இன்பத்தை அடைவது பேய்க்குணம். மனமும் எப்போதும் ஆசையின்மேல் ஆசையாகக் கொண்டு நம்முடைய காலத்தைப் பலி கொள்கிறது; வாழ்க்கையையே அழித்து விடுகிறது. “மனம் போன போக்கெல்லாம் போக வேண்டாம்” என்று பெரியவர்கள் சொல்கிறார்கள்.

ஆனால் மனத்தை அடக்கத் தெரிந்து கொண்டால் அதுவே நமக்கு ஏவல் செய்யும். பேயை ஒருவன், அடக்கும் ஆற்றல் பெற்றுவிட்டால் அது வேறு யாரும் செய்ய முடியாத காரியத்தையெல்லாம் சாதித்துத் தரும். மதம் பிடித்த யானை போன்றது அடங்காத மனம். அதனால் எந்தச் சமயத்தில் எந்தத் தீங்கு வருமோ தெரியாது. பழகிய யானை ஐம்பது மனிதர்கள் செய்யும் வேலையைச் செய்யும். மரங்களை உருட்டிக் கொண்டு வரும். பெரும் போரில் பகைவர்களை அழிக்கும். பாகன் தன்னைக் கட்ட வரும்போது தானே சங்கிலியை எடுத்துக் கொடுக்கும்.

மனத்துக்கு உள்ள சக்திக்கு அளவே இல்லை. மனத்தினை அடக்கியவர்கள் பல சித்திகளைப் பெறலாம். எல்லாச் சித்தி களையும்விட மனத்தை அடக்கும்

சித்தியே பெரிதென்று தாயுமானவர் சொல்கிறார்.

‘சினம்இறக்கக் கற்றாலும்
சித்தியெல்லாம் பெற்றாலும்
மனம் இறக்கக் கல்லார்க்கு
வாய்ஏன் பராபரமே.”

மனத்தை அடக்கியவர்கள் பிறர் உள்ளத்தில் ஓடும் எண்ணங்களை அறிவார்கள்; எதிர்காலத்தில் நிகழப் போவதை அறிவார்கள்; எல்லாவற்றையும் மறந்த ஆனந்த நிலையைப் பெறுவார்கள்.

நமக்குப் பகையாகிற மனம் மேலும் மேலும் பிறவிகளை எடுப்பதற்குக் காரணமாக நிற்கிறது உறவான மனம். தானே தன்னை அடக்கிக் கொண்டு நம்முடைய வாழ்வைப் பயனுடையதாக்கிப் பேரின்பப் பெருவாழ்வைப் பெறத்துணையாகிறது.

மனம் மூன்று குணங்களை உடையது. நமக்குப் பெரும்பாலும் தாமத குணமே மிகுதியாக இருக்கிறது. ராஜச குணமும் இருக்கிறது. சத்துவகுணம் மிகக் குறைவு. சத்துவ குண மனம் வலிமையுடையதானால் அது மற்றக் குணங்களை அழித்து விடும்.

சத்துவகுண மனப்பகுதி மற்றப் பகுதிகளையெல்லாம் அழித்துவிட்டுத் தானும் அழிந்துவிடும். மனத்தை அடக்கி ஒருமைப்பாட்டை உண்டாக்கிக் கொண்டால் மனோவயம் உண்டாகும். பிறகு மனோநாசம் உண்டாகும். அதுவே ஜீவன் முக்த நிலை.

சத்துவகுணம் விஞ்சி நிற்கும்போது மனம் இறைவன் திருவருளை நாடும். அவன் திருவுருவத்தைத் தியானிக்கும். தன் விருப்பப்படி திரிந்த மாட்டை ஒரு முளையடித்துக் கட்டி விட்டால் அது அந்த முளையையே சுற்றிச் சுற்றி வரும். ஒவ்வொரு சுற்றுக்கும் கயிற்றின் நீளம் குறைந்து கொண்டே வரும். கடைசியில் கயிறு, முளை, கழுத்து எல்லாம் இணைந்துவிடும்.

இறைவன் என்ற முளையை அடித்து அதைச் சுற்றி மனம் வளைய வருமானால் எப்போதும் இறைவன் நினைவு என்ற வட்டத்துக்குள் சுற்றும். பிறகு மெல்ல மெல்ல இயக்கமே ஒழிந்து இறைவனோடு ஒன்றிவிடும்.

காரைக்கால் அம்மையார் தம் மனத்தை அடக்கிப் பழகினவர். இறைவனுடைய திருவுருவத்தைத் தியானித்து நலம் பெற்றவர். உலகியலில் உண்டாகும் அல்லல்கள், அவலங்கள் தம்மைத் தாக்காமல் பாதுகாப்புச் செய்து கொண்டவர். க்ஷேமமாக வாழ்வும் வாழ்வையே விரும்புகிறோம். உடம்பு நோய் நொடியின்றி சுகமாக இருந்தால் அதையே க்ஷேமமாகக் கருதுகிறோம். ஆனால் இந்த உடம்பைக் காட்டிலும் சிறந்தது உயிர். அதற்கு க்ஷேமமம் உண்டாக வேண்டும். பிறப்பு அதற்கு வேண்டும். அதுதான் மகா க்ஷேமம், அதைப் பெருஞ்சேமம் என்கிறார் காரைக்கால் அம்மையார்.

தம்முடைய மனமே தமக்கு உறுதுணையாக இருந்துதான் உய்வதற்காக இந்தப் பெருஞ் சேமத்தைச் செய்தது என்று சொல்ல வருகிறார். தன்னுடைய அருமை மகள்

தன் கணவனைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு யாருடைய உதவியும் இல்லாமல் சாமர்த்தியமாகக் குடித்தனம் செய்கிறதைப் பார்த்த தாய், “என் குழந்தை தனியாகவே இருந்து தானே எல்லாவற்றையும் செய்து கொண்டு கெட்டிக்காரியாக வாழ்கிறாள்” என்று பெருமைப்பட்டுக் கொள்வதைப் போலப் பேசுகிறார் அம்மையார்.

“என்னுடைய நெஞ்சம் யாருடைய உதவியையும் பெறவில்லை. பாவம் தனியாகவே இருக்கிறது. ஒன்றிக்கட்டை அது எத்தகைய வியப்பான செயலைச் செய்திருக்கிறது தெரியுமா” என்று தொடங்குகிறர்.

“தானே தனிநெஞ்சம்.” ‘தன்னை உய்யும்படி செய்வதற்கு வேறு யாரையும் நாடவில்லை. தன்னைத் தானே உயர்த்திக் கொண்டது தான் உய்வதற்கு இதுதான் வழி என்பதை அறிந்து கொண்டு தனக்குத் தானே பெருஞ் சேமத்தைச் செய்து கொண்டது” என்கிறார்.

“தன்னை உயக் கொள்வான் தானே பெருஞ்சேமம் செய்யுமால்.”

கெட்டிக்காரப் பையன் வருங்காலத்தில் நன்றாக வாழ வேண்டுமென்று விரும்புகிறான். அவனைக் கைதூக்கிவிட யாரும் இல்லை. இருந்தாலும் அவன் தன்னுடைய சொந்த முயற்சியால் முன்னுக்கு வர எண்ணுகிறான், எவ்வளவோ பேரை நாம், “தாமே உயர்த்திக் கொண்ட மனிதர் (Self made man) என்று சொல்வதில்லையா? அத்தகையவர்களுள் ஒருவன் அவன்.”

மற்றவர்களைப் போலப் பொழுதை விணாக்காமல் உழைத்து ஊதியம் பெற்றுக்கொண்டு கண்ட செலவு செய்யாமல், பெற்றதைச் சேமிக்கிறான். அவனுடைய உழைப்பினால் பணம் சேர்கிறது. பெரிய சேமிப்பை அவன் செய்து விடுகிறான். அவனே சேர்த்த சேமிப்பு இது.

காரைக்கால் அம்மையார் மனம் அவ்வண்ணமே, தானே பெருஞ் சேமம் செய்த பெருமையை உடையது. எப்படி அந்தப் பெருஞ் சேமத்தைச் செய்தது? எந்தப் பொருளை ஈட்டிச் சேமித்து வைத்தது? இன்று வந்து நாளை போகும் பொருளை அது சேமிக்கவில்லை. பரம்பொருளையே சேமித்து வைத்திருக்கிறதாம். அதைச் சொல்கிறார்.

அந்தப் பொருள் எப்படி இருக்கிறது? சிவபெருமான் தானே அப்பொருள்? அவன் திருக்கோலம் எவ்வாறு இருக்கிறது? அவனுடைய திருமார்பில் நாகப்பாம்பு இருக்கிறது. அதை இறைவன் அணிகலமாகப் பூட்டிருக்கிறான். திருமண முழுவதுமே பாம்பை ஆபரணமாகப் போட்டிருக்கிறான். நீண்ட பாம்பு அது. அது நஞ்சை உமிழும் நாகம். அந்த நஞ்சு நெருப்பைப் போன்ற வெம்மையை உமிழ்கின்றது. அது நஞ்சு கக்கினால் கண்டவர்கள் கண் எரியும்; பட்டவர்கள் உடம்பு எரியும். பொங்குகின்ற அழலின் வெம்மையையுடைய நஞ்சை உமிழும்

நீண்ட நாகம் அது.

"பொங்கு அழல்சேர் நஞ்சு:உமிழும் நீள்நாகம்." அந்த நாகத்தை இறைவன் அணிகலனாகப் பூண்டிருக்கிறான். பூண்களால் உடம்புக்கு அழகும் பொலிவும் மிகுதியாகும். ஆனால் இறைவனுக்கு அப்படி இல்லை. பூண்களால் அவனுடைய ஆகம் பொலிவு பெறவில்லை. அவனுடைய ஆகத்தால்அந்தப் பாம்பு பொலிவைப் பெறுகிறது.

எப்படிப் பொலிவைப் பெறுகிறது? நஞ்சு உமிழும் நாகத்தைக் கண்டு யாவரும் அஞ்சுவார்கள்; அடித்துக் கொல்லப் பார்ப்பார்கள். கருடனைக் கண்டால் நாகம் அஞ்சும். ஆனால் இறைவன் திருமேனியிலுள்ள நாகத்தைக் கண்டு பக்தர்கள் அஞ்சுவதில்லை. அந்த நாகம் பக்தர்களை ஒன்றும் செய்யாது. ஆகவே அதைச் சங்கராபரணமாகப் பார்த்து வணங்குகிறார்கள் அன்பர்கள். கருடனைக்கண்டால் அதற்கு அச்சம் இல்லை. இவை அந்தப் பாம்புக்குரிய பெருமை, பொலிவு அல்லவா? அத்தகைய பாம்பை உடையவன் எம்பெருமான்.

பூண் ஆகத்தால் பொலிந்து பொங்குஅழல்சேர் நஞ்சு உமிழும் நீள்நாகத் தான்.

இந்தத் திருக்கோலம் உள்ள சிவபெருமானை நெஞ்சம் நினைத்து நினைத்து உள்ளுக்குள்ளே வைத்துப் பெருஞ்சேமமாகச் சேகரித்துக் கொண்டது. தன்னை விட்டு நழுவ விடாமல் தியானித்துத் தியானித்து உள்ளே வைத்துப் பூட்டிக் கொண்டு விட்டது. இனிக் கவலை இல்லை.

பெரிய தொகை ஒன்றை ஈட்டிப் பெட்டிக்குள்ளே வைத்துப் பூட்டிக் கொண்டவர்களுக்கு வருங்காலத்தில் துன்பம் இராது. அந்தச் சேமப் பொருளால் அவர்கள் நன்றாக வாழலாம்; உய்தி பெறலாம்.

இந்த நெஞ்சம் பெரிய பொருளாகிய நீண்ட நாகத்தானை நினைந்துப் பெருஞ்சேமம் செய்து கொண்டது; பெரிய சேமிப்பைச் சேர்த்து உள்ளே வைத்துக்கொண்டிருக்கிறது.

பெரும் சேமம் செய்யுமால் ...
நீள்நாகத் தானை நினைந்து.

இவ்வாறு பெரிய சேமிப்பைச் சேர்த்துக்கொண்ட பிறகு அது உய்வதற்கு என்ன தடை? மனம் வேறு, தாம் வேறு என்று இல்லாத ஒற்றுமை இருப்பதால் தம் அநுபவத்தையே மனத்தின் செயலாக வைத்துக் கூறுகிறார்.

தானே தனிநெஞ்சம் தன்னை
உயக்கொள்வான்
தானேபெருஞ்சேமம் செய்யுமால் —
தானே ஓர்
பூண்ஆகத் தால்பொலிற்று
பொங்கழல்சேர் நஞ்சுமிழும்
நீள்நாகத் தானைநினைந்து

இது அற்புதத் திருவந்தாதியில்
14ம் பாடல்.

# தனவணிகர் திகழ்மாலை

# பட்டினத்தார் வரலாறு

## (நேரிசை ஆசிரியப்பா)



(ஓடாப்புலி) மெ.சண்முகம்,
காரைக்குடி

மண்ணுலகிற் பிறந்து, மாதவம் போற்றி,
விண்ணுலகம் செல்ல விரும்பிக் குபேரன்,
கண்டான்; மாட கூடம், மாளிகை
கொண்ட பட்டினம்; காவிரிப்பூம் பட்டினம்.
அதிலே, பொன்னும் மணியும் பொருளும்
குதித்து விளையாடிக் கொஞ்சி மகிழும்
பெருவணிகர் நகரத்தார்; பேரும் நீண்ட
பெருங்குலத்தில் மரக்கலம் பற்பல கொண்ட,
செல்வக் கோமகன் சிவநேசர், குடிவாழும்
இல்லத் தரசி ஞான கலைக்குத்
திருவெண் காட்டுத் திருத்தலக் கடவுள்
அருளாலே, பிறந்தான் குபேரன், பட்டினத்தார்
என்ற திருவெண் காடராய்; சுவேதாரண்
யனென்ற இட்ட பெயரோடு. இடைவிடா
தென்றும் சிவனை நன்றே சிந்தித்து,
நாளும் வணிகம் நிமிர்த்தி, வானோங்க
ஆளும் பேரும் அகன்ற புகழுமாய்த்
திரைகடல் ஒடித் திரவியஞ் சேர்த்து,
வேறெந்தச் செட்டிமார் இனத்தாருஞ் செய்திடாத்
திரைகடல் வணிகம் திகழ்ந்து விளங்கல்
நாட்டுக் கோட்டை நகரத்தார் குலத்து
வீட்டுக் கோட்டையில் விளக்கான காலத்தே,
ஆயிரஞ் சேயும் ஆயிரஞ் சேனையும்
கோயிலுங் குளமுங் கோட்டை கொத்தளமும்
போராய் நெல்லும் பெருநற் தானியமும்
நீராற் சூழ்ந்த நெடிய சேயும்
மடையும் அகலா மாபெருஞ் சோழன்,
கடைபல கொண்ட திருவெண் காடர்
கடையும் நாடிக் கடன்பெற்ற நாளில்
செல்வஞ் செழித்துச் சிறந்த பொழுதில்
சிவகலை என்ற அம்மான் மகளைப்
பெண்ணும் பார்த்துப் பேசி முடித்துப்
பொன்னுந் தட்டிப் பொழுதுந் தேடி
நாளுங் குறித்து, நல்லநாள் கண்டு,
ஆளும் பேரும் முகூர்த்தக் காலூன்றிக்
கல்யாணஞ் சொல்லிப் பாக்கு வைத்து;
கல்யாண மனையும் போட்டு வைத்து;
அரசாணைக் காலூணி, விளக்கேற்றிக்
கோலமிட்டுக்
கோவில் மாலை கொண்டு வந்து,
நாவும் மனமும் நற்சொல் மொழிய,
ஊறறிய மாப்பிள்ளை அழைத்து, அங்கே,
ஆரத்தி எடுத்து, மனையில் இறுத்தி,
நற்கழுத் திருகட்டி நற்திருப் பூட்டித்

திருமாலை சூடித் தெய்வந் தொழுது,
திருமகளாம் மனைவிக்குக் கண்ட சரங்காப்பு
கொண்டவில்லை பூச்சரம் வைரத் தாலி
கண்டு பார்த்துக் கொண்டு கோர்த்துச்
சூடி மகிழ்ந்து, சுற்றம் மலிந்து,
ஆடிக் களித்து ஆனந்தக் குதூகலமாய்
அரச விருந்து அலையை விஞ்ச
உரத்த நாவசைவால் உற்றார் நகரத்தார்
பங்காளி கூடிப் பணத்திருப் பேடெழுதிச்
சங்கும் ஊதி இசைகுடி மானமேற்றுப்
பொங்கலிட்டுப் புதுப்பெண் அழைத்துப் புகுந்தனரே
இல்லறம்; திருவெண் காடரும் சிவகலையும்.
நல்லறம் பாடி நாளும் பலவோட,
அப்பச்சி என்றழைக்க எல்லோரும் இருக்க,
அப்பச்சி இல்லா அடிகளின் உள்ளத்திற்
தானும் அப்பச்சி ஆகலையே! என்று,
ஏனோ வருத்தம், ஏக்கம் வாட்டத்
திருவிடை மருதூர்த் திகழீசர் மாண்புடை
அருளால், சிவசருமர் ஏழைச் சுசீலை
கையிலே ஈசனுங் குழந்தை ஆகிக்
கோயில் விட்டுக் கோமகன் வாரிசாகி;
சிவதிரு வெண்காடர் சுவீகாரப் புதல்வனாகி,
அவணியிற் புதுமை அழகேறப் பொன்னும்
கொடுத்துச் சுவீகார முரியெழுதிச் சுற்றம்
கூடித் தங்கக் கட்டிலில் தாயார்
பிள்ளையை இட்டு நவமணி சூட்ட,
வழக்கம் போல வாழ்ந்த அப்பத்தா
மருதவா ணனென்று பெயருஞ் சூட்டினள்.
ஒருவொரு வார்த்தைக்கும் அப்பச்சி என்று
ஆண்டவன் வாய்நிறைய அழைப்பது கண்டு,
ஆனந்தம் கொண்ட அடிகளோ, கொண்டு
விற்க மகனை வேற்றுநாடு அனுப்பினார்.
விராட்டி உமியால் வேண்டிய அளவு
திரவியத்தைப் போர்த்தித் திரட்டி வந்தான்
புதல்வன். தந்தையோ போதிய திரவியம்
அதுவென்று அறியாது, கோபங் கொள்ள,
காதற்ற ஊசியும் வாராது காணும்
கடைவழிக்கே! என்று மெய்ப்பொருள் உணர்த்த,
சடைச்சிவன் காதற்ற ஊசிப் பேழை
கொடுத்து மறைய, கண்டார் மறைபொருள்
மாணிக்கம்; விடுத்தார் மனையறம்; துறந்தார்
மாளிகை ; அணிந்தார் கோவணம்.
சுற்றமும்
ஆளும் பேரும், ‘ஆனாண்டி பட்டினத்துச்
செட்டி பரதேசி’ என்று பழிக்க,
கட்டுத் திருநீறு கொண்டு திரிய,
சொத்துக்குத் தயாரான சொந்தத் தமக்கை,
சித்தராம் அடிகட்குச் சித்தமான அப்பம்
தோய்ந்த நஞ்சு வழங்க, ஓட்டில் வீசித்
தீயும் பற்றத் திகழ்ந்தார் பிழம்பாய்;
தூய சிவப்பிழம்பாய். தெளிந்த ஞானம்
பிறந்து, தத்துவம் பாடித் திருமுறை
சேர்ந்த நூலுஞ் செய்ய, நாளுஞ்
சைவம் போற்றிச் சிவனைக் காண,
சிவத்தலம் எல்லாஞ் சுற்றி அலையும்
பொழுதில் அன்னை புகழுடம் பெய்த
அழுது ஓடி அங்கு வந்து,
மரக்கட்டை அகற்றி, வாழை மட்டை
பரப்பி, ‘ஐயிரண்டு திங்கள்’ என்று
ஆரம்பித்து, ஞான அன்னையை ஞானத்தாற்
தகனம் செய்தார். வழி நெடுகச் சித்து
விளையாடிப் பத்ரகிரி வேந்தனைப் பித்தராக்கிச்
சிவபக்த னாக்கிச் சிவனடி சேர்த்து
அவர்மனையாள் பாவம் அழித்துப் பேரின்ப
வழிதந்த கரும்பு வழிநெடுகும் கசக்க
வழிதாரும் ஒற்றியூர் வந்து, ஆதி
புரிநாதர் அமரிடம் புகுந்தவுடன் இனிக்கச்
சிறுவருடன் விளையாடிச் சித்து விளையாடிச்
சிவலிங்கத் திருமேனிச் சிவரூபம் தந்தாரே!
வாழிய அடிகள்! வாழிய அவர்புகழ்!
வாழிய நற்றன வணிகர்!
வாழிய! வாழிய! வாழிய! வாழியவே!

## புத்திர பாக்கியம் பெற்ற

# மாண்டவ்ய புத்திரர்கள்



**தேனம்மை இலக்குமணன்,**
காரைக்குடி

அரிது அரிது மானிடராய்ப் பிறப்பது அரிது என்றாள் ஔவைப் பிராட்டி. இப்பூவுலகில் ஒருவருக்கு அப்படிப்பட்ட அரிய மனிதப் பிறப்புக் கிடைப்பதே பெற்றோரால்தான். அப்படிப்பட்ட உத்தமப் பெற்றோரை மதியாது மதிகெட்டு வீழ்ந்தவர்கள் சிலர் உண்டு. தம் பெற்றோரை மதியாதவருக்குப் பிள்ளைப் பாக்கியமும் கிட்டுவதில்லை.

கோதாவிரி நதி பாயும் அழகிய ஆரண்யம் அது. சண்பக வனம் என்று பெயர். பெயருக்கேற்றாற்போல் சண்பக மலர்கள் பூத்துக் குலுங்கி மணம் வீசிக் கொண்டிருந்தது வனமெங்கும். அந்த ஆரண்யத்தில் ஒரு பர்ணசாலையில் கர்மாண்டன் என்பவர் வாழ்ந்து வந்தார். அவரது மகன் மாண்டவ்யன். மாண்டவ்யனின் மனைவி பெயர் ஹேமாவதி.

மாண்டவ்யனுக்கும் ஹேமாவதிக்கும் ஒன்றல்ல இரண்டல்ல ஆறு புத்திரர்கள் அடுத்தடுத்துப் பிறந்தார்கள். அவர்கள் வீதி ஹோத்ரன், யக்ஞஹோது, மதுஷ்யந்தன், வேதஹேது, பர்ணாதன், உதங்கன் ஆவர். தாய் தந்தை இருவரும் இவர்களைப் பாராட்டிச் சீராட்டித்தான் வளர்த்தார்கள். உரிய பருவத்தில் இவர்களுக்குத் தகுந்த கன்னிகைகளுடன் திருமணமும் செய்து வைத்தார்கள்.

திருமணம் ஆனதாலோ என்னவோ, அல்லது இயல்பான அசட்டையாலோ இவர்கள் அறுவருமே பெற்றோரைப் பாதுகாப்பதில் அக்கறை காட்டவில்லை. பிள்ளைகள் கவனிக்க மாட்டார்கள் என்ற உலக நடப்பைப் புரிந்து கொண்ட மாண்டவ்யர் தம் மனைவியுடன் பிள்ளைகளை எதற்கும் எதிர்பார்க்காமல் தனித்து வசித்து வந்தார். இவ்வாறு சில காலம் கழிந்த நிலையில் கால ஓட்டத்தில் மாண்டவ்யர் இயற்கையுடன கலக்கும் காலத்தில் அவர் மறைவினை எய்தினார். தனித்து விடப்பட்ட ஹேமாவதி தன் பிள்ளைகளுடன் தங்க வந்தார். தாங்கள் போற்றிப் பாதுகாத்த புதல்வர்கள் தன்னைக் காப்பார்கள் என மிக உறுதியாக அவர் நம்பினாள். ஆனால் அவளின் நம்பிக்கை பொய்த்தது.

தாயாரைச் சுமையாகக் கருதிய பிள்ளைகள் ஒருவர் மாற்றி ஒருவர் தம் பொறுப்பைத் தட்டிக் கழித்தனர். மனம் சோர்ந்தார் ஹேமாவதி.சரியான உணவும் உறக்கமும் இல்லாமல் மெலிந்தார். பெற்றதாயைப் பற்றிக்



கிஞ்சித்தும் கவலைப்படவில்லை பிள்ளைகள். இவ்வாறு கைவிடப்பட்டதால் மனம் வருந்தி தனித்து நோயுற்றுக் கிடந்த தாய் ஹேமாவதி ஒருநாள் மரித்துப் போனார். அப்போதும் பதறிக்கொண்டு ஓடவில்லை அவர்கள்.

ஆனால் பத்துமாதம் சுமந்து பெற்ற தாயின் தீரா வருத்தம் சும்மாவா போகும்? அவர்களுக்கு மாதாவைக் கொன்ற மாத்ருஹத்தி தோஷத்தைக் கொண்டு வந்தது. அவர்களுக்குப் பிறக்கும் குழந்தைகள் அனைத்துமே அடுத்தடுத்து இறந்து போயினர். அறுவரின் இல்லத்திலும் அப்படி நிகழ்வது தொடர்ந்ததால் திகைத்துப் போயினர் மாண்டவ்ய சகோதரர்கள். என்ன செய்வது, ஏன் இப்படி நிகழ்கிறது என்பதைப் புரிந்து கொள்ள முடியவில்லை அவர்களால்.

இவ்வாறு நிகழாமல் தடுப்பது எப்படி என்பதைக் கேட்டு அவர்கள் கௌதம முனிவரைச் சரணடைந்தார்கள். அவர் கூறினார்,"உங்கள் தாயார் ஹேமாவதியை நீங்கள் ஆதரிக்காமல் புறக்கணித்ததன் காரணமாக அவர் வருத்தத்துடன் மரணமடைந்ததால் மாத்ரு ஹத்தி தோஷம் ஏற்பட்டுள்ளது. இதற்கு ஒரே பரிகாரம் பலாசவனத்தில் எழுந்தருளி இருக்கும் ஈசனைப் பூசித்து வருவதுதான்" என்றார்.

மேலும்,"அங்கே ஒருநாள் செய்யப்படும் யாகம் ஆயிரம் யாகங்கள் செய்வதற்கு ஒப்பாகும். அங்குள்ள காவிரியில் நீராடினால் கங்கையில் பன்னிரெண்டு ஆண்டுகள் நீராடிய பலன் கிட்டும். இங்கே முன்னோர்களுக்காகச் செய்யப்படும் நீத்தார் கர்மங்கள் காசியில் செய்வதற்கு ஈடாகும்' என்று கூறினார்.

அவர்கள் உடனே பாவத்தைப் போக்க வல்ல பலாசவனம் எனப்படும் கஞ்சனூரை அடைந்தார்கள். அங்கே உத்தர வாஹினி என்னும் காவிரி நதி தெற்கிலிருந்து வடக்காகப் பாய்ந்து செழுமை அளித்துக் கொண்டிருந்தது. அறுவரும் மெய்குளிர, மனம் நடுங்கக் காவிரியில் நீராடி எழுந்தார்கள். தம் தாயாரான ஹேமவதியை அவரது முதுமைக் காலத்தில் கவனிக்காததை நினைத்து வருந்தி ஈமச்சடங்குகளைச் செய்தார்கள்.

அடுத்துக் கற்பகாம்பாள் சமேத அக்னீசப்பெருமானின் சந்நிதிக்குச் சென்று மனம், மெய் உருகப் பிரார்த்தனை செய்து பூசித்தார்கள். தினம் தினம் அவர்கள் அறுவரும் பூசனை செய்வதைக் கண்ட ஈசன் மனம் இரங்கினார். ஒரு மாசி மாத்தின் மக நட்சத்திர நாளில் இறைவன் திருக்காட்சி தந்து அவர்களின் பாவங்களைப் போக்கி அருள் பாலித்தார். அவர்கள் அறுவரும் "இறைவா! எங்களுக்குப் புத்திர பாக்கியம் நீடிக்காத சோகத்தை நீக்கி அருள வேண்டும்" என்று வேண்டினர்.

அவர்களின் வேண்டுதலுக்குச் செவிசாய்த்த அக்னீசப் பெருமான் "உத்தர நட்சத்திரத்தன்று காவிரியில் நீராடி காலை முதல் மாலைவரை திருக்கோடிக்காவல், திருவாலங்காடு, திருவாவடுதுறை, ஆடுதுறை, திருமங்கலக்குடி, திருமாந்துறை ஆகிய ஆறுதலங்களிலும் வழிபட்டு அர்த்தசாம பூசையில் இங்கே பலாசவனத்தில் எம்மை வழிபட்டால் புத்திரதோஷம் நீங்கும்" என்று கூறினார்.

இதைக் கேட்டு மகிழ்ந்த மாண்டவ்ய புத்திரர்கள் சப்த ஸ்தலங்களிலும் உத்தர நட்சத்திர நாளன்று வழிபாடு செய்து சந்தான சௌபாக்கியம் பெற்றனர். பெற்றோரைக் கவனிக்காதவர்களுக்குப் பிள்ளைகள் தங்காமல் போனதும் பின் தவறுணர்ந்து திருந்தியதும் இறையருளால் புத்திரப் பாக்கியம் கிடைத்ததும் ஒரு விசித்திரமான படிப்பினைதானே. ஏழு தலங்களைப் பணிந்து ஏற்றம் பெறுவோம்.

## சிவாலயங்களின் சிறப்புகள் - 10



சிவனேச செல்வர்களுக்கு பணிவான வணக்கங்கள்.

சிவாலயங்களின் சிறப்புகளை மாதம் ஒரு திருக்கோயில் என எழுத இருக்கிறேன். இந்தத் தகவல்கள் கோயிலின் ஆலய குறிப்புகளில் இருந்தும் கோயில் குருக்கள் சொல்வதை வைத்தும் எழுதி எழுதியுள்ளேன்.

வே.இராமசாமி,B.Com.F.C.A.,
Chartered Accountant
பலவான்குடி

# வைத்தீஸ்வரன் கோயில்

பகுதி – 1

### வைத்தீஸ்வரன் கோவில்

வைத்தீஸ்வரன் கோயில் திருத்தலம் சிதம்பரத்திலிருந்து 22 கிலோமீட்டர் தொலைவிலும் மயிலாடுதுறையில் இருந்து 16 கிலோமீட்டர் தொலைவிலும் தஞ்சாவூரில் இருந்து 110 கிலோமீட்டர் தொலைவிலும் அமைந்துள்ளது

### கோயில் திறந்திருக்கும் நேரம்

காலை 6 மணி முதல் மதியம் 1:30 மணி வரையிலும் மாலை 4 மணி முதல் இரவு 8 மணி வரையிலும்

வைத்தீஸ்வரன் என்றால் தமிழில் மருத்துவக் கடவுள் என்று பொருள்படும் .

இந்த ஸ்தலத்து ஈஸ்வரனை வணங்கினால் அனைத்து விதமான நோய்களும் நீங்கும் என்பது நம்பிக்கை. இவர் நோய் தீர்க்கும் வல்லவர் என்று மக்கள் கருதுகிறார்கள் திருக்கோயிலில் உள்ள சித்தாமிர்த குளம் புனித நீர் நிறைந்ததாக கருதப்படுகிறது இதில் நீராடினால் அனைத்து நோய்களும் நீங்கும்


மருந்தீசர் திரிபுரசுந்தரி

### திருக்கோயிலின் வரலாறு

சுமார் 2000 ஆண்டுகளுக்கு முன்பு சோழ மன்னர்களால் கட்டப்பட்ட ஆலயம் .நாயன்மார்களால் பாடல் பெற்ற

தலம்அருணகிரிநாதரும் இத்தலத்தைப் பற்றி திருப்புகழ் பாடியுள்ளார் .

மூலவர்:வைத்தியநாதசுவாமி (வைத்தீ ஸ்வரர்)

அம்மன்:தையல்நாயகி அம்மன்

தல விருட்சம்:வேம்பு

தீர்த்தம்:சித்தாமிர்தம்

ஆகமம் :காமிக ஆகமம்

புராண பெயர்:புள்ளிருக்குவேளூர்

ஊர்:வைத்தீஸ்வரன் கோயில்

மாவட்டம்:நாகப்பட்டினம்

மாநிலம்:தமிழ்நாடு

பாடியவர்கள்:

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், அருணகிரிநாதர், குமர குருபரர், படிக்காசு தம்பிரான், சிதம்பர முனிவர், காளமேகப்புலவர், ராமலிங்க அடிகள், வடுகநாத தேசிகர், தருமையாதீனம்

முருகப்பெருமான் செல்வமுத்துக் குமாரசுவாமி என்ற பெயரில் அருள் புரிகிறார்.

நவக்கிரகங்களில் அங்காரகனுக்கு (செவ்வாய்) உரிய பரிகார ஸ்தலம்

சோழநாட்டில் உள்ள காவிரி வடகரை தலங்களில் 16 வது பாடல் பெற்ற தலம். இவ்வூருக்குப் புள்ளிருக்குவேளூர் என்ற பெயரும் உண்டு. “புள்’ என்றால் பறவை. ஜடாயு என்னும் பறவை ராஜனும், ரிக்வேதமும், வேள் என்ற முருகப்பெருமானும், சூர் என்ற சூரியதேவனும் இவ்வாலய இறைவனை வழிபட்டதால் இவ்வூருக்குப் புள்ளிருக்குவேளூர் என்ற பெயர் உருவானது.

இக்கோயிலில் உள்ள முருகப்பெருமான் பெயர் முத்துக்குமார சுவாமி. இவன்மீது முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழ் என்னும் நூல் பாடப்பட்டுள்ளது

**புராண வரலாறு:**

இவ்வாலயத்திலுள்ள குளக்கரையில் சதாநந்த முனிவர் தவம் செய்துகொண்டிருந்தார். அப்போது குளத்தில் வாழ்ந்த தவளை ஒன்றை பாம்பொன்று விழுங்க முயன்றது. அதைப்பார்த்த முனிவர், பாம்பும் தவளையும் இவ்வாலயக் குளத்தில் வாழக்கூடாதென்று சாபம் கொடுத்தார். அதுமுதல் இந்தக் குளத்தில் பாம்புகள், தவளைகள் வாழ்வதே இல்லையென்று பரவசத்துடன் கூறுகின்றனர் ஊர்மக்கள்.

இவ்வாலய இறைவனுக்கு வைத்தீ ஸ்வரர் என்ற பெயர் உருவாகக் காரணமானவர் நவகிரகங்களில் ஒருவராக விளங்கும் செவ்வாய் எனும் அங்காரகன். பரம்பொருளான இறைவனைவிட்டு உமாதேவியார் நீங்கியிருந்த காலத்தில், சிவபெருமான் யோகநிலையில் இருந்தார். அப்போது அவரது நெற்றிகண்ணிலிருந்து வியர்வைத் துளியொன்று பூமியில் விழுந்தது. அதிலிருந்து ஒரு குழந்தை உருவானது. அந்தக் குழந்தையை பூமாதேவி எடுத்து மங்களன் என்று பெயரிட்டு வளர்த்துவந்தாள்.

அந்த குழந்தை வளர்ந்து சிவபெருமானை நோக்கித் தவமிருக்க ஆரம்பித்தார். அவர் தவயோகநிலையில் இருக்கும்போது அவர் மீது தீப்பிழம்பு கொழுந்துவிட்டிருந்தது. இதனால் அவருக்கு வெண்குஷ்ட நோய் உருவானது. அப்போது அசரீரி குரல், “இளைஞனே, வைத்தீஸ்வரன் ஆலயம் சென்று அங்குள்ள குளத்தில் ஒரு மண்டலம் நீராடி, இறைவனை வழிபட்டால் உனது ரோகம் குணமாகும்‘ என்றது.

அதன்படி அங்காரகன் இங்குவந்து சித்திரக் குளத்தில் நீராடி இறைவனை வழிபட்டார். சிவனது அம்சத்தில் உருவான அங்காரகனின் நோயைத் தீர்ப்பதற்காக பார்வதிதேவி தைலப் பாத்திரத்தில் சஞ்சீவி வேர்களையும் வில்வ மரத்தடி மண்ணையும் கொண்டு வந்து இறைவனிடம் கொடுக்க, அதை அவர் அரைத்து மருந்தாகி வைத்தியராக மாறி அங்காரகன் உடலில்

பூசினார். அங்காரகனுக்கு ஏற்பட்ட வெண்குஷ்ட நோய் குணமானது. அங்காரகன் தவத்தை மெச்சிய சிவபெருமான், அவரை நவகிரகங்களில் மூன்றாவது கிரகமாக அமைய வரமளித்தார். தென்கிழக்குநோக்கி அங்காரகனை வணங்குவது மரபு.

அங்காரகன் பற்றிய வேறு சில புராணக் கதைகளும். அதன்படி பரத்துவாச முனிவருக்குப் பிறந்தது மங்களன் எனும் குழந்தை. அதை பூமாதேவி எடுத்து வளர்த்தாள். உரிய வயது வந்ததும் பரத்துவாச முனிவரிடம் மங்களனை ஒப்படைத்தாள். முனிவர் மங்களனுக்கு பல கலைகளையும் கற்பித்தார். மங்களனின் நடவடிக்கைகள் முனிவருக்கு பாசத்தை உருவாக்கியது. சிவனைநோக்கித் தவமிருக்குமாறு முனிவர் மங்களனுக்கு ஆலோசனை வழங்கினார். அதன்படி மங்களன் தவம்செய்ய, சிவபெருமான் அவருக்கு கிரகபதவி வழங்கினார் என்றும் கூறினார்.

அடுத்து, தன்னை மதிக்காமல் தட்சன் நடத்திய யாகத்தை அழிக்க சிவபெருமான் வீரபத்திரரை உருவாக்கி அனுப்பிவைத்தார். வீரபத்திரர் தட்ச சம்ஹாரம் முடித்தும் அவரது கோபம் தனியவில்லை. இதனால் உலகம் நடுங்கியது. அதை கண்டு அஞ் சிநடுங்கிய தேவர்கள் சிவபெருமானிடம் முறையிட்டனர். சிவபெருமான் வீரபத்திரரின் கோபத்தைத் தணித்தார். அதனால் வீரபத்திரர் அழகாக உருமாறினார். அவரை அங்காரகனாக மாற்றினார் சிவபெருமான் என்கிறது மச்சபுராணம். வீரபத்திரர் அம்சம் என்பதால் செவ்வாய்க்கிழமை விரதமிருப்பது சிறந்தது. அதிலும் சித்திரை மாத முதல் செவ்வாய்க்கிழமை விரதமிருந்து செவ்வாய் என்கிற அங்காரனை வழிபட்டால் மிகச்சிறந்த பலன் கிடைக்குமென்று கூறப்படுகிறது.

தென்னிந்தியாவின் மிகப் புகழ் பெற்ற சிறப்பு வாய்ந்த பிரார்த்தனை தலம் இது.

இந்த கோயிலின் கிழக்கில் பைரவ மூர்த்தியும், தெற்கில் விநாயகர், மேற்கில் வீரபத்திரர், வடக்கில் காளி ஆகியவர்கள் காவல் தெய்வங்களாக எழுந்தருளியுள்ளனர்

## திருப்பணிகள் விவரம்

1. 1682 ஆம் ஆண்டு கல் திருப்பணி செய்யப்பட்டு பிறகு 1689 ஆம் ஆண்டு முத்துக்குமாரசுவாமி தம்பி தான் என்பவரால் இந்த இந்த திருக்கோயில் கும்பாபிஷேகம் செய்யப்பட்டது .

2. 1802 ஆம் ஆண்டு திருக்கோயிலின் கொடிமரம் தங்கமயமாக்கப்பட்டது

3. கர வருஷம் ஆனி மாதம் 16ஆம் (26/06/1891)தேதி நாட்டுக்கோட்டை நகரத்தாரில் கானாடுகாத்தான் கரு.தூ குடும்பத்தினரால் பெரும் பொருட்செலவில் கோவில் முழுவதும் பழுது பார்த்து சீர்திருத்தம் செய்யப்பட்டு தருமை ஆதீனம் தலைமையில் குடமுழுக்கு செய்யப்பட்டுள்ளது.

4. பிரபல வருஷம் ஆவணி மாதம் 10ஆம் (01/09/1927) தேதி நாட்டுக்கோட்டை நகரத்தாரில் கானாடுகாத்தான் கரு.தூ குடும்பத்தினரால் பெரும் பொருட்செலவில் கோவில் முழுவதும் பழுது பார்த்து சீர்திருத்தம் செய்யப்பட்டு தருமை ஆதீனம் தலைமையில் குடமுழுக்கு செய்யப்பட்டுள்ளது.

5. 1947இல் கோயில் தருமை ஆதீனத்தால் முழுவதும் பெரும் பொருட்செலவில் பழுதுபார்க்கப்பட்டுள்ளது.

6. 02/07/1969இல் தருமை ஆதீனத்தால் கோவில் முழுவதும் பழுது பார்த்து குடமுழுக்கு செய்யப்பட்டுள்ளது.

7. 1998இல் கோவில் முழுவதும் பழுது பார்த்து தருமை ஆதீனம் தலைமையில் குடமுழுக்கு செய்யப்பட்டுள்ளது

8. 2020 ஆவது ஆண்டு மே மாதம் கோவில் முழுவதும் பழுது பார்த்து தருமை ஆதீனம் தலைமையில் குடமுழுக்கு செய்யப்பட்டுள்ளது

## சிற்றுலா

# கோடியக்கரை வனவிலங்கு சரணாலயம்



திருமதி லக்ஷ்மி ரவி,
நாகப்பட்டிணம்

நாகப்பட்டிணம் மாவட்டத்தில் பார்க்கவேண்டிய மற்றொரு இடம் கோடியக்கரையில் அமைந்துள்ள வனவிலங்கு சரணாலயம். இது இருபத்தைந்து சதுர கிலோ மீட்டர் பரப்பளவில் அமைந்துள்ளது. இது ஆயிரத்துத் தொள்ளாயிரத்து அறுபத்து ஏழாம் ஆண்டு உருவாக்கபட்டது. இப் பசுமைமாறா வனச் சரணாலயத்திற்கு நுழைவு சீட்டு உண்டு. ஜீப்பில் நாம் உள்ளே செல்லவேண்டும்.

பரந்த வனப்பகுதியில் கூட்டம் கூட்டமாக புள்ளி மான்கள், கொம்பு மான்கள், என அரிய வகை மான்கள் பல இயற்கை சூழலில் இங்குமங்கும் ஓடி, ஒன்றை ஒன்று முட்டி, துள்ளித் தாவியபடி விளையாடிக் கொண்டிருக்கின்றன. ஜீப்பில் இருந்தபடி இதைக் காண்பது கண்கொள்ளாக் காட்சியாக இருக்கிறது.

பல நல்ல வளமான குதிரைகளும் ஒருபுறத்தில் மேய்ந்து கொண்டு இருந்தன. குதிரைகளை வண்டியில் பூட்டிய நிலையிலோ, குதிரை சவாரிக்குப் பயன்படுத்தப்படும் குதிரையாகவோ நாம் பெரும்பாலும் பார்த்திருப்போம். இங்கே நல்ல செழிப்பான, கொழுகொழுப்பான குதிரைகள் இயற்கை வனச் சூழலில் கூட்டம் கூட்டமாக வலம் வருகின்றன. குதிரை வேகமாக ஓடக்கூடிய பிராணி என்பது நமக்குத் தெரியும். ஆனாலும், மனிதன் பழக்கப்படுத்திய குதிரைகள்தான் வேகமாக ஓடுமா அல்லது குதிரையின் இயல்பே வேகமாக ஓடுவதா என்று எனக்கு ஒரு சந்தேகம். நாங்கள் பார்த்துக்கொண்டிருக்கும் போதே ஒரு குதிரை வேகமாக ஓடியது. ஏன் ஓடியது என்று தெரியவில்லை. ஆனாலும், குதிரைகள் இயல்பிலேயே வேகமாக ஓடும் என்பதை அது எங்களுக்கு உணர்த்தியது.

அதுபோலவே நான் மாடுகளையும்



வீட்டுப் பிராணிகளாகவே பார்த்திருக்கிறேன். பசுவோ, எருமையோ, எருதோ அவை மனிதர்களுக்கு சேவை செய்யவே பிறந்தவை போன்றே வீடுகளில் வளர்க்கப்படுகின்றன. இந்த வனப்பகுதியில், நல்ல கொழு கொழு மாடுகள் கூட்டம் கூட்டமாகத் தம் சுற்றத்தாருடன் திரிந்து கொண்டிருந்தது கண் கொள்ளாக்காட்சியாக இருந்தது.

ஆண் மயில்கள் தோகையை விரித்தபடி ஆங்காங்கே அழகூட்டுகின்றன. பெண் மயில்களும் தென்பட்டன.

இவற்றைத் தவிர நரி, காட்டுப்பன்றி, முயல், ஆமை, குரங்கு போன்றவை இங்கு காணப்படும் மற்ற விலங்குகள் என்றும், இந்த விலங்குகள் நீர் அருந்துவதற்காகத் தொட்டிகள் கட்டப்பட்டு அதில் நீர் நிரப்பப்படுகிறது என்றும் உணவுகளை அவை அவை தங்கள் இயல்புப்படி தாங்களாகவே தேடி உண்கின்றன என்றும் அங்கிருந்த அதிகாரி கூறினார்.

நாங்கள் ஆர்வமாக விலங்குகளைப் பார்த்து ரசித்ததைப் பார்த்த அவர், நீங்கள் கண்டிப்பாக ஆகஸ்ட், செப்டம்பர் மாதங்களில் கோடியக்கரைக்கு வாருங்கள். பறவைகள் சரணாலயத்தில் பல வெளி நாட்டுப் பறவைகளும் வந்திருக்கும், கடல் மேற்பரப்பிலும், அருகிலிருக்கும் மரங்களிலும் அமர்ந்திருக்கும். மிகவும் வித்தியாசமான அபூர்வமான பறவைகளும் காணக் கிடைக்கும் என்று கூறினார்.

*(சிற்றுலா தொடரும்...)*

---

**திருநெல்லை இதழுக்கான ஆன்மிகப் படைப்புகள் வரவேற்கப்படுகிறன. திருநெல்லை (இணைய இதழ்), கோவிலூர் மடாலயம், கோவிலூர் என்ற முகவரிக்கு அஞ்சலிலோ அல்லது நேரிலோ தங்கள் ஆக்கங்களை அன்பர்கள் அளிக்கலாம்.**

---

# பெரியபுராணக் கதைக் களம்

பகுதி – 5

அன்பர்களே!

தொண்டர்தம் பெருமை அளவிடற்கு அரியது. அவர்களின் அருள் வரலாறு நம்மை நல்வழியில் நடத்தும். திருநெல்லையின் இவ்விதழில் புதுமை இணைப்பாக பெரியபுராணத்தில் இடம்பெற்றுள்ள அறுபத்து மூன்று அருந்தொண்டர் கதைகள் ஒவ்வொன்றாக காதுகளுக்கும், கண்களுக்கும் மனதிற்கும் இன்பம் சேர்க்கும் வகையில் கதைவடிவில் ஒளிபரப்பாகிறது. கேட்டு, உணர்ந்து அனுபவித்து மகிழுங்கள்.



# தென் சபாநாயகர் கோயில் தரிசனம்

ஆடிப்பூரத்தை முன்னிட்டு 07.08.2024 புதன்கிழமை அருள்மிகு சிவகாமி அம்மனுக்குச் சிறப்பு அபிடேக ஆராதனைகள் நடைபெற்றன.

## ஆவணி மாத வழிபாட்டு நிகழ்ச்சிகள்

| | | | |
|---|---|---|---|
| 17.08.2024 | பிரதோஷம் | | |
| 19.08.2024 | பௌர்ணமி | மாலை | சிவகாமி அம்மன் வழிபாடு |
| 22.08.2024 | சங்கடஹரசதுர்த்தி | மாலை | விநாயகர் வழிபாடு |
| 26.08.2024 | தேய்பிறை அஷ்டமி | மாலை | வைரவர் வழிபாடு |
| 26.08.2024 | கார்த்திகை | மாலை | ஆறுமுகர் வழிபாடு |
| 31.08.2024 | பிரதோஷம் | | |
| 11.09.2024 | வளர்பிறை அஷ்டமி | மாலை | வைரவர் வழிபாடு |
| 14.09.2024 | வளர்பிறை ஏகாதசி | காலை | பெருமாள் வழிபாடு |
| 15.09.2024 | பிரதோஷம் | | |
| 16.09.2024 | சதுர்த்தசி | மாலை | நடராசப்பெருமான் மகா அபிஷேகம் |

# ஒலிப்பேழை

## கம்ப வாரிதியின் பக்கம்



திருநெல்லை இதழில் மாதந்தோறும் கம்பவாரிதி இலங்கை திரு ஜெயராஜ் அவர்களிடம் வினாக்களை எழுப்பி அவ்வினாக்களுக்கு விடையை அவர்களின் குரல் வழியாகப் பெற்று திருநெல்லையில் பதிவிடுகிறோம்.

**வினா – 1** விளக்கம்

இலங்கையில் எந்தெந்த சைவ ஆலயங்கள் முக்கியமானவை. அவை குறித்து எங்களுக்கு தெரிவிக்க வேண்டுகிறோம்.



**கம்பராமாயணத்தில் இரண்டு கேள்விகள்**

**வினா – 2** விளக்கம்

1. காட்டில் இராமன் மாயமானைத் துரத்திச் சென்று மாய மானை வீழ்த்தினார். அப்போது மாரீசன் இராமன் குரலில் ஓலமிட்டதை உண்மை என்று எண்ணி இராமனைத் தேட இலக்குவனை சீதை கட்டாயப் படுத்தி அனுப்புகிறார். அப்போது இலக்குவன் அம்பினால் பர்ணசாலையின் வாயிலில் ஒரு கோடு போட்டதாகவும், அதைத் தாண்டாமல் இருக்குமாறு அறிவுறுத்தியதாகவும் சொல்லப் படுகிறதே. அது கம்பராமாயணத்தில் உள்ள செய்தியா.



**வினா – 3** விளக்கம்

2. சீதையைத் தனியே விட்டு விட்டு இராமனை தேடி இலக்குவன் போக மறுத்தபோது,"நின்ற நிலை இது நெறி யிற்றன்று", என்று சீதை கூறியதன் உண்மைப் பொருள் என்ன?



# கோவிலூர் ஆண்டவர் நூலகம்

கோவிலூரில் அமைக்கப்பெற்றுள்ள "கோவிலூர் ஆண்டவர் நூலகத்தில்" சுமார் 43,000 நூல்கள் உள்ளன. நூல் விவர அட்டவணையைப் பதிவிறக்கம் செய்ய இங்கு சொடுக்கவும்.

# கோவிலூர் ஆண்டவர் இணைய நூலகம்




கோவிலூர் ஆண்டவர் நூலகத்தில் உள்ள நூல்கள் அனைத்தையும் கோவிலூர் ஆண்டவர் நூலகம் என்ற இணையதள நூலகத்தில் பதிவேற்றம் செய்து தமிழ்க் கொடையாக அளிக்க முடிவு செய்துள்ளோம்.

தற்போது சுமார் 4618 அரிய நூல்கள் இணைய நூலகத்தில் உள்ளன.

இப்போது நாள் ஒன்றுக்கு சுமார் 3000 பக்கங்களைப் புதிதாக இந்த நூலகத்தில் சேர்த்துக் கொண்டிருக்கிறோம். இந்த நூலகத்தில் உள்ள நூல்களை விலை இல்லாமல் படிக்கலாம்/ பதிவிறக்கம் செய்து கொள்ளலாம்.

இந்த நூலகத்தில் உள்ள நூல்களை விலை இல்லாமல் படிக்க / பதிவிறக்கம் செய்து கொள்ளலாம்.

கோவிலூர் ஆண்டவர் நூலகத்தில் உள்ள (பட்டியலில் காட்டப்பெற்றுள்ள) எந்த நூலாவது உங்களுக்கு தேவை என்றால் நூலகப் பொறுப்பாளர் திரு வெங்கடாசலம் அவர்களைத் (தொலைபேசி எண் 9442912649 என்பதில்) தொடர்பு கொள்ளவும். அந்த நூல் பதிப்புரிமைக்கு அப்பால் இருக்கும் நிலையில் அதை நம் இணைய நூலகத்தில் சேர்த்திட ஆவன செய்கிறோம். தாங்களும் அந்த நூலை உங்கள் வீட்டில் இருந்து இணையவழியாகப் படிக்கலாம். நூல் இணையத்தில் சேர்த்தபின் உங்களுக்குத் தகவல் தெரிவிக்கப்படும். நீங்கள் அந்த நூலை இணைய நூலகத்தில் படித்துக் கொள்ளலாம் அல்லது பதிவிறக்கம் செய்து கொள்ளலாம். இதற்கு எந்தக் கட்டணமும் இல்லை

இணைய நூலகத்தில் சென்ற மாதத்தில் மட்டும் சுமார் 500 நூல்கள் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளன. மிகவும் அரிதான சில நூல்கள் இப்போது பதிவேற்றம் செய்யப்படுகின்றன.

இணைய நூலகத்தைப் பயன்படுத்துவோம். இறை தத்துவங்களை அறிவோம்.

# முந்தைய இதழ்களை படிக்க அந்தந்த லிங்கை கிளிக் செய்யவும்

திருநெல்வேலி – புரட்டாசி 

திருநெல்வேலி – ஐப்பசி 

திருநெல்வேலி – கார்த்திகை 

திருநெல்வேலி – மார்கழி 

திருநெல்வேலி – தை 

திருநெல்வேலி – மாசி 

திருநெல்வேலி – பங்குனி 

திருநெல்வேலி – சித்திரை 

திருநெல்வேலி – வைகாசி 

திருநெல்வேலி – ஆனி 

தென்சபாநாயகர் கோவில் கட்டளைகளில் பங்கு கொள்ள விரும்புபவர்கள் 94433 35312 என்ற எண்ணை தொடர்பு கொள்ளவும்.



திருநெல்லை இணைய வழி திங்களிதழைப் பெற விரும்புபவர்கள் 94433 37011 என்ற எண்ணிற்கு வாட்சப்-பில் தொடர்பு கொள்ளவும்.



இணைய வழி தேவார இன்னிசை வகுப்பில் கலந்து கொள்ள விரும்புபவர்கள் 94433 35312 என்ற எண்ணை வாட்சப்-பில் தொடர்பு கொள்ளவும்.



திருநெல்லை இதழுக்கான ஆன்மிகப் படைப்புகள் வரவேற்கப்படுகிறன. திருநெல்லை (இணைய இதழ்), கோவிலூர் மடாலயம், கோவிலூர் என்ற முகவரிக்கு அஞ்சலிலோ அல்லது நேரிலோ தங்கள் ஆக்கங்களை அன்பர்கள் அளிக்கலாம்.



திருநெல்லை இணைய வழி மாத நாளிதழ் பற்றி தங்களுடைய மேலான கருத்துக்களை வாட்சப் எண். 94433 37011 மற்றும் koviloormadalayam@gmail.com என்ற மின்னஞ்சலுக்கு அனுப்பவும்.